# திருமுறைத்
# திருத்தல வழிபாடு



## திருத்தொண்டர் திருநெறிய அறக்கட்டளை

பதிவெண் 41/94, பனப்பாக்கம். (வ.ஆ.அ.மா.)

திருச்சிற்றம்பலம

# திருமுறைத்
# திருத்தல வழிபாடு




இயற்றியவர் திருமுறைமணி

**புலவர். எ. வேலாயுதன், M.A.**

திருவாலங்காடு 97-ஆவது சேக்கிழார் திருமுறை
மாநாடு 26—1—1996-ல் வெளியிடப்பெற்றது.

திருத்தொண்டர் திருநெறிய அறக்கட்டளை
1/57, புதுப்பேட்டை, பனப்பாக்கம் (ப.எண் - 41/94)
(அஞ்) 631052 வ. ஆ. அ. மா.

நூற்பெயர் : திருமுறைத் திருத்தல வழிபாடு

இயற்றியவர் பெயர் : ஏ. வேலாயுதன்

பதிப்பு : முதற்பதிப்பு — 1996

பக்கம் : 64

தாள் : 10—05 K.G.

அளவு : கிரவுன் 1/8

**விலை : ரூ. 7—00**

பிரதிகள் : 1000

அச்சகம்-ஸ்ரீ ராமச்சந்திரா பிரஸ் வேலூர்(வ.ஆ.அ.மா.)

## பொருளடக்கம்

உ

திருச்சிற்றம்பலம்

**மு. கிருஷ்ணன், I.A.S. (ஓய்வு)**

தலைவர்; தமிழக தெய்வச் சேக்கிழார் மன்றம்; குன்றத்தூர்
திருத்தொண்டர் திருநெறிய அறக்கட்டளை பனப்பாக்கம்

# அணிந்துரை

மக்களாய்ப் பிறந்தார்க்கு மகேசுவரனை வழிபடுதல் முக்கிய கடமை. வீட்டிலே வழிபடுவது சிறப்பு, அதனிற் சிறந்தது ஆலய வழிபாடு அதனில் சிறந்தது கூட்டு வழிபாடு அதனில் சிறந்தது தலயாத்திரை வழிபாடு. ஒவ்வொரு தலமும் ஒவ்வொரு முறையில் சிறப்புடையது. தேவார ஆசிரியர்களாலும் மாணிக்கவாசகர் அருணகிரிநாதர் போன்ற அருளாளர்களாலும் பாடப் பெற்ற தலங்கள் மிகச்சிறப்புடையனவாகக் கருதப்படுகின்றன. மூர்த்தி தலம் தீர்த்தம் ஆகியவைகளை முறையாக வழிபடவேண்டும் நாம் போற்றும் சமயாசிரியர்கள் தலந்தோறும் சென்று இறைவனை வழிபட்டுப்பேறு பெற்றமை நாம் அறிவோம். அவர்கள் பெற்ற பேற்றினை நாமும்பெற வேண்டும் என்று தலயாத்திரை மேற் கொள்ளுகிறோம். அந்தமுறையில் தான் நமது தமிழகத்தெய்வச் சேக்கிழார் மன்றத்தின் சார்பாக 2—8—95 முதல் 5—8—95 வரை நான்குநாள்கள் ஒரு பேருந்தை வைத்துக் கொண்டு 56 அடியார் களுடன் பலதலங்களுக்குச் சென்று வழிபட்டு வந்தோம். இத் தலயாத்திரை அனுபவங்களை ஒரு நூலாக வெளியிட விரும் பினோம். இப்பணியை நம் திருமுறைமணி புலவர் வேலாயுதனார் அவர்கள் சீரிய முறையில் செய்து முடித்துள்ளார். ஆங்காங்கே அடியார்களை வரவேற்று உணவு வழங்கி உபசரித்த பெருமக் களை வாழ்த்தி வணங்குவது நமது கடமை. திருநெடுங்கள நாதர் உழவாரப் பணிக்குழு, கைலாசபுரம், திருச்சி, மதுரை திரு. பி. கோவிந்தராசன் குமாரர் திரு. ஞானசேகரன், இராமேசுவரம் திருப்பனந்தாள் ஆகிய இடங்களில் உணவு அளித்த ஸ்ரீ காசிமடம் எஜமான் சுவாமிகள் சங்கரன் கோயில் திரு, ஆ. சித்ரபுதர முதலியார், புதுக்கோட்டை சத்குரு ஸ்ரீ சாந்தானந்தா சுவாமிகள், சூரியனார் கோயில் ஸ்ரீ கந்த பரம்பரை ஸ்ரீ சிவாக்கிரயோகிகள் ஆதீனகர்த்தர் ஆகிய எல்லாருக்கும் நமது நன்றியைத் தெரிவித் துக்கொள்ளுகிறோம்.

அன்பன்,
**மு. கிருஷ்ணன்**

# வழிபாட்டுக்குழுவின் வந்த திருக்கூட்டம்

1 திரு மு. கிருஷ்ணன், I.A.S.
தமிழக தெய்வச்சேக்கிழார் மன்றத் தலைவர்
2 ஓதுவார், ஆடலரசு
3 புலவர். எ. வேலாயுதன்,
ஆற்காடு சேக்கிழார் மன்றம்
4 திரு அ. சகாதேவன்
5 திரு ஜெயராமன்
6 ராஜம்மாள் ஜெயராமன்
7 திரு நித்தியானந்தம்
8 N. மீனாட்சி நித்தியானந்தம்
9 விசாலாட்சி அம்மாள்
10 திரு பலராமன்
11 திரு S. முரளி
விளாப்பாக்கம் சேக்கிழார் திருவருள் மன்றம்
12 திரு ஆ. ரேணுகோபாலன்
13 சரோஜா ரேணுகோபாலன்
14 திரு அ. ஏகாம்பரம்
15 ஞானசௌந்தரி ஏகாம்பரம்
16 திரு மு. பரசுராமன்
17 V. கஸ்தூரி வாசுதேவன்
18 திரு சி. பஞ்சாட்சாரம்
19 மீனாம்மாள் சீதாபதி
20 சி. லட்சுமி சின்னப்பா
21 K. புஷ்பாம்மாள் கதிர்வேலன்
22 N. ருக்மணி நாராயணசாமி
23 K. ரஞ்சிதம் குப்புசாமி
ஆரணி சேக்கிழார் மன்றம்
24 திரு சோ. ஆறுமுகனார் M.A.B.T. தலைவர்
25 ஆனந்தா ஆறுமுகம்
26 திரு ஆ. நடராச சுந்தரம்
27 திரு கோ. கண்ணன்
28 ,, க. குமரவேல்
29 ,, ரா. கோபால்
30 ,, க. முனியப்பன்
31 திருமதி செ. செல்வகுமாரி
32 திரு வெ. தேவராஜ்
33 ,, திருநாவுக்கரசு
34 ,, மணிவாசகம்
களம்பூர் சேக்கிழார் மன்றம்
35 திரு K.M. கண்ணன் (துணைத் தலைவர்)
36 கோவிந்தம்மாள் கண்ணன்
37 திரு சு. எத்திராசன் செயலர்
38 பவுனாம்பாள் எத்திராசன்
39 திரு எ. இராமநாதன்
40 திரு வி. சம்பத்து (வேலூர்)
41 திருமதி கனகம்மாள் ,,
தேவிகாபும் சேக்கிழார் மன்றம்
42 திரு இரா. முருகன் தலைவர்
43 உமாமகேஸ்வரி முருகன்
44 திரு கணேசன்
45 திருமதி காமாட்சி கணேசன்
46 திரு முருகன் (குங்குலியா)
47 திருமதி ஜெயாமுருகன்
48 இரா. இராணியம்மாள்
49 திரு இரா. சீனிவாசன் (விண்ணமங்கலம்)
50 திரு ரா. கங்காதரன் (தெள்ளூர்)
காஞ்சிபுரம் அன்பர்கள்
51 திரு ப. பழனி
52 திரு S. இராமகிருஷ்ணன்
53 மஞ்சுளா இராமகிருஷ்ணன்
54 திரு சண்முக சுந்தரம்
55 திரு கு மணி அரக்கோணம்
56 திரு க. மோகன் ,,

உ
திருச்சிற்றம்பலம்.

# "திருமுறைத் திருத்தல வழிபாடு"

*நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்*
*தேடித் திரிந்து சிவபெருமா னென்று*
*பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்*
***கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே. (திருமூலர்)***

"உலகெலாம் ஓரழகு"

உலகெலாம் உய்ய, மக்கள் "யாதும் ஊரே யாவரும் கேளிர் "என்னும் மனப்பான்மையுடன் விளங் கவேண்டும் மனிதநேயம் உயிர்க்கருணை முதலிய அன்பு நெறியைப் போற்றியொழுக வேண்டும். உலகி யலில் உயர் நாகரிகத்தின் இனியதாகிய இவ்வாழ்வியல் நோக்கம் செயலாக்கம் பெற வேண்டுமாயின் மக்கள் பிறரைப் புரிந்துகொள்ளுதல், இடம், காலம் அறிந்து வாழும் வாழ்வியலைத் தெரிந்துகொள்ளுதல் முதலியன வற்றை அடிப்படையாகக் கொண்டு அவரவர் கலை யொழுக்கப் பண்பாட்டினையும் மதித்தல், பேணுதல் ஆகிய இயல்புடன் யாத்திரை, சுற்றுலா முதலியன மேற் கொள்ளுதல் அவசியமாகும் இத்தன்மைகளைத் தூய்மை யுடன் மேனெறி நோக்கும் பெருந்தவமாகக் கொண்டு போற்றி நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும் தேடித் திரிந்து திருத்தல வழிபாடு மேற்கொண்டிருந்தோர் தமிழ கத்தின் சான்றாண்மை மிக்க அருளாளர் பலராவர். இத்திறத்தின் திருத்தல வழிபாடு கொண்ட பெரியோர் உலக இயற்கையின் வான், வளி, தீ, நீர், மண், இவற் றின் உள்ளீடாய், ஆற்றலாய், விளங்கும் இறையருள் அழகு இவ்வுலகின் மலை – கடல் இடையிட்ட காடும், காவும், கவின்பெறு துருத்தியும், ஆறுங், குளனும்–

மன்றமும் பொதியிலும், ஊரூர் கொண்ட சீர் கெழுவிழவும் ஆகிய தூய கவின் துதைந்த தொல்எழில் தலங்களிலும் பொழில் சூழ் நிழற்பொலிவின் பூசைச்சிறப்புமிக்க திருக்கோயில்களிலும் விளங்கக் கண்டு உணர்ந்து போற்றி மகிழ்ந்து பாடி பிறர்க்கும் உணர்த்திச் சென்றுள்ளனர்.

"திருவருள் வாய்த்தது"

இதனைத் தெய்வச்சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம் அருளார்தெளிவின் அழகுறத் தெரிவிக்கக் காணலாம், நந்தமிழ்ச்சான்றோர்தம் அருள் நலமிக்க நாகரிக வாழ்வியல் நலமெலாம் உணரலாம். இவ்வுணர்வூக்கத்தால் சேக்கிழார் மன்றம் அமைத்துத் திருத்தொண்டர் புராணச் சொற்பொழிவுடன் விழாக் கொண்டாடிப் போற்றிவரும் சேக்கிழார் மன்ற அன்பர்கள் திருவருள் வாய்ப்பருளும் போதெல்லாம் திருக்கூட்டமாகச்சென்று வழிபாடு செய்துவருதல் பல்லாண்டாக வழக்கம் இதன்படி 2—8—95 முதல் 5—8—95 வரையிலான நான்கு நாள் திருத்தல வழிபாடு செய்யத்திருவருள் வாய்த்தது.

"திருக்கூட்டம் - புறப்பாடு"

தமிழக தெய்வச் சேக்கிழார் மன்றத் தலைவர் சேக்கிழார் அடிப்பொடி திருமிகு. மு. கிருஷ்ணன் இ.ஆ.ப. (ஓய்வு) அவர்கள் தலைமையில் ஓதுவாமூர்த்தி திரு. ஆடலரசு அவர்கள் திருமுறையிசையுடன் ஆற்காடு சன்மார்க்க சபைக்கூடத்தில் வழிபாடு செய்துகொண்டு 1-8-95 செவ்வாய் இரவு 9-30 மணிக்குப் புறப்பட்டோம் ஆற்காடு சேக்கிழார் மன்றத் தலைவர் திரு. ஆ. வி. தட்சணாமூர்த்தி, வள்ளல் ஈசுவரப்பனார் முதலிய அன்பர்கள் உடனிருந்து வழியனுப்பி வைத்தனர் ஆற்காடு சேக்கிழார் மன்றத்தினர் திரு. சகாதேவனார் தலைமையுடன் எண்மரும் விளாப்பாக்கம் சேக்கிழார் மன்றத்

தினர் தலைவர் திரு. அ. ரேணுகோபாலனார் உடன் பன்னிருவரும் காஞ்சிபுரம் அன்பர் திரு. பா. பழனியவர் களுடனாய. நால்வரும் அரக்கோணம் அன்பர் திரு. மணியுடன் இரண்டுபேரும் ஆக ஆற்காட்டிலிருந்து புறப்பட்டது பேருந்து. ஆரணி சேர்ந்து அங்கு ஆரணி சேக்கிழார் மன்றத்தலைவர் திரு. சோ. ஆறுமுகனார் M.A.B.T., அவர்கள் உடன் பதினொருவரும் களம்பூர் சேக்கிழார் மன்றத்தினர் திரு. சு. எத்திராசன், (ஓய்வு பெற்ற ஆசிரியர்) உடன் ஏழுபேரும் உடன் கொண்டு சேத்துப்பட்டு சென்று அங்கு தேவிகாபுரம் சேக்கிழார் மன்றத் தலைவர் திரு. இரா. முருகன் உடன் ஒன்பதின்மரையும் உடன் கொண்டு அடியேன் ஒருவ னும் ஆக ஐம்பத்தாறு அன்பர்களும் ஐம்பத்தாறு தேசத் தரசர் என்னுமாப்போலவும் உலகம் இறையும் அருளும் இயக்க இயங்குமாறு போலவும் பேருந்தினை நடத்துனர் திரு. எல்லப்பன் ஓட்டுநர் திரு. இராசு இவர்கள் செலுத்த தொலைக்காட்சியில் திருவருட்செல்வரை (திரைப்படம்) கண்டுகளித்துக் கொண்டே திருக்கூட்டமாசப் பய ணித்தோம் நள்ளிருளில் நட்டம் பயில்வானைப் போற்றி யவாறே பயணம் தொடர்ந்தது.

## " திருவானைக்கா "

2-8-95 புதன் அதிகாலை 5-15 மணிக்கு கட்டு இருள் விலகி நிலம் புலர்கின்ற அதிகாலைப் போதில் காவிரி யைக் கண்டோம். திருவரங்கம் அம்மா மண்டப படித் துறையில் நின்று காணும் எங்கள் முன் குளிர் நீர் வெள்ளமாய் நீர் அலை குழைய பரவி விரிந்து நடக்கின்ற காவிரி இன்ப வெள்ளமாகவே தோன்றினாள். என்ன வெல்லாமோ பேசத் துடிப்பது போலவும் பிசிராந்தை யைக் காணும் கோப்பெருஞ் சோழன் உள்ளம் மகிழ் வதுபோலவும் உணர வைத்தாள்.

காவிரியை ஆடிப் பதினெட்டாம் நாளுக்கு முன் பதினேழிலேயே காணத் துடித்து வந்த எங்களுக்கு காவிரியின் பரந்த வெள்ளம் கண்கொள்ளாக்கவினாகத் தோன்றியது.

*வம்புலா மலர் நீரால் வழிபட்டு*
*செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்து*
*எம்பிரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி*
*உம்பர் நாயகருக்கு அன்பரும் ஒக்குமால்*

என்னும் சேக்கிழார் திருவாக்கை நினைந்தவண்ணம் காவிரியில் நீராடினோம். ஒருமையுணர்வின் எண்ணி னால் குளிர் கருணையுள் குளித்தோம் என்றும் சொல்லத் தோன்றியது. **'எரிநீர்த்திரையுகளும் காவிரி சூழ்தென்னானைக் காவானைத் தேனைப் பாலைச்செழ நீர்த்திரளைச் சென்றாடினேனே!** என்னும் அப்பர் வாக்காகத் தோன்றுகின்றது. அனை வரும் குளித்து முடித்து காலை 7 மணிக்கு திருவானைக்கா சென்றோம்.

*வானைக்காவில் வெண்மதி மல்கு புல்கு வார் சடைத்*
*தேனைக் காவில் இன்மொழித் தேவிபாகம் ஆயினன்*
*ஆனைக்காவில் அண்ணலை அபயமாக வாழ்பவர்*
*ஏனைக்காவல் வேண்டுவார்க்கு ஏதம் ஏதும் இல்லையே*

(திருஞானசம்மந்தர்)

கோயில் பூசை தொடங்குகின்ற வேளை! ஆதலால் அன் பர்கள் கோயிலை வலம் வரவும் கலையழகைக் காணவும் ஆக தனித்தனியாகச் சென்றனர். நெடிதுயர்ந்த மதிலும் வண்ணச் சிற்பம் மிக்க இராசகோபுரமும் கண்டோம் சிலர் சிற்றுண்டி மற்றும் தேனீர் அருந்திவந்தனர். தலை வர் மு. கிருஷ்ணன் அவர்கள் திருவாவடுதுறை ஆதீனக் கிளைமடம் திருமதி பாப்பம்மாள் சத்திரத்தில் பூசை முடித்து வந்ததும் குழுவாகவும் தனித் தனியேயும் சென்றும் ஆனைக்கா அண்ணலை தரிசனம் செய்தோம்

பள்ளந்தோய் வெள்ளமாய்த் தழைத்த சிவலிங்கமூர்த்தியும், வெண்ணாவல் நீழல் சூழ் விமானத்தின் அழகுத் தோற்றமும் கண்டு மிக்க மகிழ்ச்சியுற்றோம்.

*" எனையாளும் வெண்ணா வலுளாய்*
*நிலையா அருளாய் எனும் நேரிழையே "*

என்னும் ஞானசம்பந்தப் பிள்ளையார் தமிழைப்பேசியது உள்ளம். நினைந்தவாறே சென்று அகிலாண்ட நாயகியின் பேரருள் அழகைத் தரிசித்தோம். காளமேகப் புலவர்க்குக் கவிமழை அருள்வித்த கருணையைக் கண்ணாரக் கண்டோம் கோயிலை வலம் வந்து மூன்றும் பிரகாரத்தில் சுவாமி சந்நிதியின் நேர், கூடத்தின் நிற்கும் நான்கு தூண்களைக் கண்டோம். தூண்களா அவை? சுடர்கலை தோன்றும் சிற்பக் கலைக்கூடம் அவையே, என்னும்படி நிற்கின்றன. அங்கு அழகிய வண்ண ஓவியப் படங்களின் வரிசை சிற்பக்கலைத் தலைக்கு திருமுடிப் பட்டமாகவே தோன்றியது.

*வஞ்சமின்றி வணங்குமின் வைகலும்*
*வெஞ்சொலின்றி விலகுமின் வீடற*
*நைஞ்சு நைஞ்சு நின்று உள்குளிர் வார்க்கெலாம்*
*அஞ்சலென்றிடும் ஆனைக்கா அண்ணலே*

(திருநாவுக்கரசர்)

தமிழகத்தின் எழில்மிகு வளங்கள் இத்தகைய திருக்கோயில்களிலிருந்தே தோன்றுகின்றன என்பதை இந்நாட்டு மக்கள் என்று தான் உணர்வோமா? இந்த எண்ணம் தோன்றியவுடன்

***" துன்பமின்றித் துயரின்றி என்றுநீர்***
***இன்பம் வேண்டில் இராப்பகல் ஏத்துமின்***
***என்பெரான் ஈசன் இறைவன் என்றுள்குவார்க்கு***
***அன்பனா யிடும் ஆனைக்கா அண்ணலே. "***

என்னும் அப்பர் திருவாக்கு நினைவுறுத்தியது. நினைவின் உணர்வுடன் நடந்தோம். நான்காவது பிரகாரத்தின் நெடிய திருநீற்று மதிலைப்போல, நினைவும் நெடிதாகி நீண்ட வண்ணமாக, ஆனைக் காவிலிருந்து புறப்பட்டோம் திருவானைக்காவின் சிறப்பினைத் தேவாரம், தல புராணம், காளமேகப்புலவர், கச்சியப்ப முனிவர், சைவ எல்லப்ப நாவலர் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்றவர் அருளிய மாத்தமிழ்க் கவிதைகளுள் கணாலாம். தெய்வச் சேக்கிழார் கோச் செங்கட் சோழர் புராணத்துள் புறாவின் பொருட்டு துலாத்தட்டில் தன்னையே நிறுத்தி அறம் நிறைவித்த சோழர் தம் உரிமைச் சோணாட்டில் அகிலொடு சந்தனம் மணிகொழிக்கும் அணிநீர்ப் பொன்னியின் கரையில் சந்திர தீர்த்தக் குளிர் சோலையுள்

*அப்பூங்கானில் வெண்நாவல் அதன் கீழ்*
*முன் நாள் அரிதேடும்*
*மெய்ப்பூங்கழலார் வெளிப்படலும்*
*மிக்க தவத்து ஓர் வெள்ளானை*
*கைப்பூம்புனலும் முகந்தாட்டிக்*
*கமழ்பூங்கொத்தும் அணிந்திறைஞ்சி*
*மைப்பூங்குவளைக் களத்தாரை*
*தானும் வழிபட்டு ஒழுகுமால்*

ஆன செயலால் திரு ஆனைக்கா என்று அதற்குப் பெயராக என்று தெரிவிக்கின்றார். இந்த அழகிய செய்தி மலர் விரிந்து பொங்கும் மகிழ்நினைவின் தேனாகியது. திருமால் தேடும் திருவடி வெள்ளானை பூம்புனலாட்டிப் பூங்கொத்து அணிவித்திறைஞ்சத் தோன்றியது எனின் பூவார் மலர் கொண்டு அடியார் தொழும் புண்ணியத்தின் பெருமை எத்துணை உயர்ந்தது? எண்ணமெல்லாம் சிந்தனையுள் ஆழ்ந்தது. ஒலிநாடாப் பதிவின் திருமுறைப் பாடல்களை இசைத்தபடியே பேருந்தும் விரைந்தது.

"அன்பிலாலந் துறை"

*பிறவிமாயப் பிணக்கில் அழுந்தினும்*
*உறவெலாஞ் சிந்தித்து உன்னி உகவாதே*
*அறவன் எம்பிரான் அன்பிலாலந்துறை*
*மறவாதே தொழுதேத்தி வணங்குமே -(திருநாவுக்கரசர்)*

பேருந்தின் ஒலிபெருக்கியில் திருவானைக்காதே வாரப் பாடல்களை ஓதுவாமூர்த்தி ஆடலரசு ஓதிக் கொண்டே வந்தார். அன்பிலாலந்துறை அருகில் வரும் போது அத்தலத்தினை சம்பந்தரும் அப்பரும் பாடியுள்ள பாடற் சிறப்பையான் உரையாக வழங்கினேன். சிறிது நேரத்திலேயே கோபுரவாயில்முன் பேருந்து நின்றது. நமபார்வதிபதயே! "அரகரமகாதேவ" என்னும் முழக் கத்துடன் அனைவரும் இரங்கி கோபுரத்தைத் தரிசித் தோம். பழமை வாய்ந்த கோபுரம் ஐந்து நிலையுடைய அமைப்பாக இருந்தது. காலசம்மார மூர்த்தியின் அழகிய தோற்றம் கண்டு வணங்கினோம். வயலும் பொழிலும் சூழ்துறையாக அக்கோயில் விளங்கியது கண்டு உள்ள மும் குளிர்ந்தது.

*"கணைநீடெரி மாலர வம்வரை வில்லா*
*இணையாஎயில் மூன்றும் எரித்த இறைவர்*
*பிணைமாமயி லுங்குயில் சேர்மட அன்னம்*
*அணையும் பொழில் அன்பிலாலந்து றையாரே"*

என்னும் பிள்ளையார் திருப்பாடலை ஓதுவார் ஓதினர் "பொழில் அன்பிலாலந்துறை" இன்றும்குளிர் பொழி லாகத் தோன்றுதல் கண்டு எல்லா உள்ளமும் குளிர்ந் தன. ஓதுவார் தேவாரம் ஓதி முன்செல்ல அனைவரும் அமைதியுடன் தொடர்ந்தனர். வலம் வரும்போது பக்கத்தில் நந்தியாவர்த்தம் செடிகள்தழைத்திருந்ததும் கிளை சுமந்த மலர்கள் பலவாகவும் நிலம் பரந்த மலர்கள் அதனினும் பலவாகவும் இருத்தல் கண்டோம். நந்தியா

வர்த்த வெண்மலர்களின் ஐந்திதழ்வடிவம் கண்களுக்கு மட்டுமா ?! உணர்விற்கும் அல்லவா மருந்தாகியது வாயிற் காவலை வணங்கியுள்ளே புகுந்தோம். வலப் பக்கம் பிரமன் - பூசனை புரியும் புடைச் சிற்பமும் இடப் பக்கம் திருவும் மாலும் பூசைபுரியும் புடைச் சிற்பமும் பேரழகுடன் எழிலார்ந்த தோற்றமாய் இருக்கக்கண்டும் செவிசாய்த்த விநாயகரை வழிபட்டு வணங்கி (கொள் ளிடநதியின் தென்கரையில் திருஞானசம்பந்தர் பாடிய திருப்பாடல்களை செவிசாய்த்து கேட்டமையால் செவி சாய்த்த விநாயகர் எனப்பெயர் பெற்றார்) சப்த கன்னி யரைக் கண்டோம். இறைவன் திருமுன் ஓதுவார் தலப்பதிகம் முழுவதும் ஓதினார் குருக்கள் அர்ச்சனை புரிந்தார் கற்பூரதீபம் ஏற்றி ஆரத்தி செய்தார்.

தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க் கும் இறைவா போற்றி! போன்ற தொடர்முழக்கம் அனை வரும் செய்ய அனைவர் உள்ளமும் பரவசமாயிற்று என் பதனை அடுத்து விளைந்த பெரும் அமைதியே உணர்த் திற்று, விபூதி பெற்றுப் பூசிக்கொண்டோம் சுவாமி- சுயம்பு ஆவுடையார் சதுரம் - இறைவன் திருப்பெயர் ஆலந்துறையார். திருஞானசம்பந்தர் வழங்கிய பெயர் இதுவே மற்று சத்திய வாகீஸ்வரர் என்று தற்போது கோயிலில் தெரிவிக்கும் பெயராயுள்ளது. பிரமன் பூசித் ததால் பிரமபுரீசர் என்றும் பெயர் என்றுர் குருக்கள். அம்மன் சௌந்தர நாயகியின் திருமுன் அழைத்துச் சென்றார். அம்பாளின் நின்றவண்ணத் திருக்காட்சி காண்பவர் உள்ளத்தில் அமைதியை நிலைபெறச் செய்தது. வணங்கி குங்குமம் பெற்றோம் நடராசரை வணங்கினோம் உட்சுற்றில் நல்ல உயரத்துடன் அமைந்த தட்சணாமூர்த்தியின் சந்நிதி-பிரமன் இருபுறம் சூரிய சந்திரருடன் திருமால் பிட்சாடனர் காசி விசுவ

நாதர் விசாலாட்சி பைரவர் வள்ளி தெய்வயானையுடன் முருகன் அனைவரையும் கைகுவித்த வண்ணமே வணங்கித்தரிசித்து வந்தோம்.

நாயன்மார் நால்வருடன் தெய்வச் சேக்கிழாரும் குருமூர்த்தமாய்க் காட்சி அருளினார். அழகிய தோற்றம் நெஞ்சைக் கோயிலாக்கியது. மண்டபத்தூண்களின் சிற்பம் சிறிய அளவில் இருப்பினும் சிந்தை நிறையழகுடையன மலைப்பாம்பு கன்றை விழுங்குவதும். இரண்டு பாம்புகள் பின்னிக்கொள்ள மத்தியில் சிவலிங்கத் தோற்றம். முருகன் சிவலிங்க பூசை புரிதல் முதலிய சிற்பங்கள் அழகுமிளிர் சிறப்பு குறிப்பிடத்தக்கனவாயுள்ளன.

காவிரியின் வளமார் நீர்வளம் நிறைவித்த சோலை சூழ் அழகு கண்களுக்குத் தண்மையளித்தது, உடம்பிற்கும் இதமான மென்காற்றை அளித்தது. அன்பில் என்னும் தலத்தின் தண்மையும் ஆலந்துறை என்னும் கோயில் அருள் நீர்மையும் உலகெலாம் விளங்க இறைவனைப் போற்றினோம். வற்றாத காவிரிபாய் வளவர் நாடு வளநாடாய்த்திகழ பிரார்த்தனை புரிந்தோம்.

## எறும்பீசர்

*மறந்து மற்றது பேரிடர் நாடொறும்*
*திறம்பி நீ நினையேல் மடநெஞ்சமே*
*புறஞ்செய் கோலக் குரம்பையி லிட்டெனை*
*எறும்பியூரரன் செய்த இயற்கையே* – *திருநாவுக்கரசர்*

மதியம் பனிரெண்டு மணியானது திருவெறும்பூர்க்குச் செல்ல பேருந்து விரைந்தது. உச்சிப்போதில் திருச்சி உச்சிப் பிள்ளையாரை தியானித்தபடியே திருச்சியைக் கடந்து எறும்பூர் வருவதற்கு ஒரு மணியாகிவிட்டது. குன்றின் கோயில் அருகில் சென்றோம். வாயில் சார்த்தி

யிருந்தது. மாலை நான்கு மணிக்குத்தான் கோயில் திறப் பார்கள் என்றறிந்து சிலமணித்துளிகள் பிரார்த்தனை செய் தோம் எங்கள் சுறுசுறுப்பு எறும்பீசனைக் காண்பதற்கு போதாது என்பதுணர்ந்தோம். கைலாசபுரத்தில் திருத் தொண்டர் திருக்கூட்ட அன்பர் எம்வருகை நோக்கி இருப்பதை எண்ணியுடனே காணச் சென்றோம்.

## கைலாசபுரம் - முருக வழிபாடு

கைலாசபுரத்தில் முருகன் கோயில் ஐயப்பன் ஆதி பராசக்தி கோயில் சூழ அழகிய திருமுன் பேருந்து நின்ற தும் நெடுங்களநாதர் உழவாரப் பணிக்குழு அன்பர்கள் கரங்கூப்பி வணங்கி இன்மொழிகூறி எங்களை வரவேற்ற கனிவு காவிரி நீரினும் கருணை மிக்கதாக இருந்தது. எங் கள் தலைவர் மு. கிருஷ்ணன் IAS (ஓய்வு) அவர்கள் முன் செல்ல உடன் சென்ற அனைவரும் முருகன் சந்நிதியின் முன் சென்று நின்றோம் அருளார் அழகின் திருமுருகன் தெய்வயானை வள்ளி சமதேனாய் நின்ற அழகும் அலங் காரமும் நெஞ்சையள்ளியது.திருமுறையோதி திருப்புகழ் பாடி அன்பர்கள் துதிக்க கற்பூர ஆரத்தியில் முருகன் தரிசனம் கண்ணிறைந்து கருத்துள்ளும் நிறைந்தது. விபூதி பெற்றோம் எங்களை அம்மண்டபத்திலேயே சுற்றி அமர்வித்து மதிய உணவு அழகிய விருந்தாகவே வழங் கினர் அனைவரும் ஆறுசுவையமுதத்தை ஆறுமுகன் தரிசனம் கண்டுகொண்டே உண்டு மகிழ்ந்தோம்.

## " நெடுங்களத் திருப்பணி "

உண்டு முடித்ததும் அன்பர் சிலர் அமர்ந்து ஓய்வு கொண்டனர், சுற்றுச்சூழல் அழகைச் சுவைத்தனர் சிலர் துண்டை விரித்து படுத்தனர் சிலர் யானும் தலைவரும் அன்பர்களுடன் உரையாடி நெடுங்கள நாதர் திருக் கோயில் பள்ளியறைக் கதவமைக்க திருத்தல வழிபாட் டுக்குழுவினர் அனைவரும் உவந்தளித்த ரூ. 1185-00

திருத்தல வழிபாட்டுச் செலவின் தொகையிலிருந்து ரூ. 874-ம் பிறவும் சேர்ந்து ரூ. 3060/- தலைவர் மூலம் உழவாரத் திருப்பணிக்குழுவினரிடம் அளித்தோம். நெடுங்களத் திருப்பணிபற்றியும் சேக்கிழார் படிமம் பிர திட்டை செய்து மாநாடு நடாத்துதல் பற்றியும் உணர் வின் மிகு இனிப்பாகத்திருத் தொண்டின் திறமே பேசி மகிழ்ந்தோம். இதன் தொடர்பால் இத்திருப்பணிக்கு ஆற்காடு மகாநாட்டில் திருசரவணமூர்த்தியவர்கள் மணி விழா நினைவாக ரூ. 1001-ம் பின்னர் தந்தார் என்பதும் இத் திருத்தொண்டின் சிறப்பாகும்.

## " குமார வயலூர் "

மாலை 4 மணிக்குக் கைலாசபுரம் மன்ற அன்பர் களிடம் பிரியாவிடைபெற்றுப் புறப்பட்டோம். பேருந் தின் ஒலிநாடா திருமுறை முழங்க உள்ளக்கிளர்ச்சியும் ஊர்தியுடன் விரைந்து எழுந்தது. கற்குடியை வழிபடச் செல்லும் நாங்கள், கற்குடி என்பது தற்போது உய்யக் கொண்டான்மலை என்ற பெயரில் உள்ளது என்பதை அறிந்து கோயில் வழி பற்றி சாலையில் சென்ற ஒருவரை நிறுத்தி விசாரித்தோம். நின்ற இடமே கோயில் வெளி மதில் ஓரம்தான் ஆயினும் அந்த ஒருவர் குடிபோதை யில் தன்னை இழந்த நிலையில் வம்புபேசி பேருந்துள்வர முயற்சிக்க ஓட்டுனர் வயலூர் சென்று வழிபட்டு மீண் டும் வரும்போது வரலாம் என்று வண்டியை வேகமாக ஓட்டிச் சென்றார். இதுவும் திருவருளே என்று அயர்ந்து அமைதியுற்றோம். வயலூர் முருகனை வழிபட்ட பின் னர் அருள் கூடியவர்க்கே கற்குடி மேவும் கற்பக நாத ரைக் கண்டு கும்பிடும் பேறுவாய்க்கும் என்பதை பின் னர் தெளிந்தோம் (கற்குடியில் காண்போம்.)

## " வளவர் நாடும் - வயலூரும்"

தென்னை, வாழை, செந்நெற் கரும்பும் செழிக்கும் வயல்களின் சூழல் வயலூரின் பெயர்க் காரணத்தை

விளக்கமுறக்காட்டின - அம்மம்மா! பண்ணை மருத வயல் பரப்பே முருகன் விளையாடும் இடம் என்னும்

*ஏழ்தலம் புகழ் காவேரியால் விளை*
*சோழ மண்டலம் மீதே மனோகர*
*இராச கம்பீர நாடாளு நாயக - வயலூரா*

என்னும் அருணகிரியார் வாக்கு எத்துணை இனிய உண்மை யழகு - என்று எண்ணமெல்லாம் எழிலாய்த்தோனறின. குமார வயலூர் திருக்கோயிலுக்கும் திருக்குளத்திற்கும் இடையில் பேருந்து சென்று நின்றது. நீர் நிறைந்திருக்கும் குளம் கண்டு தண்ணொளி பெற்றன கண்கள். திரும்பிக் கோயிலை கண்டபோது வண்ணங்களின் புதிய வார்ப்பாய் புதுப்பொலிவுற்றுப் பொங்குகின்ற திருக்காட்சியை க்கண்டன கண்கள் கண் பெறும் பயன் இவ்வாறல்லவோ இருக்கவேண்டும். கண்ணோட்டம் என்னும் அருளழகு பெற்ற கண்கள் - பாலை நிலத்தைப் பார்த்துக்கொண்டு எத்தனை நாள் தண்ணளியாகிய கண்ணழகைப் பாதுகாக்க முடியும்? இறைவா, தமிழ்த்திருநாடு எல்லாம் இவ்வயலூரைப் போலவே எழிலார் வளம் பெற அருள்வாயா ? என்றே ஏங்கி எழுச்சியுற்றது உள்ளம். குமாரவயலூர் திருக்கோயில் திருப்பணி செய்யப்பெற்று வண்ணங்களின் எழிலார் ஓவியங்கள் உடன்விளங்கித்திருக் காட்சி தந்தது. **16—7—95**ல் தான் குடமுழக்கு நடைபெற்றுள்து.

## " ஆதிநாதர் குமாரன் "

இக்கோயில் அகுள்மிகு ஆதிநாயகியுடனாய ஆதி நாதர் கோயில் - சிவபெருமான் திருக்கோயில் இதன் பரிவார தெய்வமாக விளங்கும் முருகப்பெருமான் பேரழகுடன் விளங்குகின்றுர். குமாரக் கடவுள் சிவபூஜை புரிந்த திருத்தலமாயின்மையின் குமார வயலூர் என்னும்

பெயராயிற்று' அருணகிரியார் முருகனருளை நல்லருளா கப்பெற்ற சிறப்பினால் முருகன் திருத்தலமாகவே ஏற்றம் பெற்றது என்பதறிந்தோம்.

ஓதுவார் திருமுறையோதி முன்செல்ல தொடர்ந்து சென்றோம். ஆதிநாதர் திருமுன் நின்றோம். குருக்கள் சேக்கீழார் மன்ற அன்பர் பெயரால் அர்ச்சனை புரிந்து கற்பூர ஆரத்தி செய்ய தரிசனம் செய்தோம். வெள்ளி நாகப்பணத்தின் கீழ் வெள்ளிய விபூதிக்காட்சியுடன் ஒளிவடிவாய சிவலிங்க மூர்த்தியாய் விளங்கும் ஆதிநா தரை ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் ஜோதியே என்று போற்றித் தொழுதோம். நமபார்வதி பதயே ! அரகரமகாதேவா ! தென்னாடுடைய சிவனே போற்றி ! முதலிய முதல்முழக்கமும் செவியுள் நிறைந்து சிந்தையை கிளர்வித்தது,விபூதிபெற்று நெற்றியில் பூசியவண்ணமே சென்றோம். நடராசரை வணங்கிக் கொண்டோம். திரு வடியின் நுனிவிரல் ஊன்றி எம்பித்தோன்றும் திருநடன க்காட்சி இது முதற்கரணமாகிய சதுரத்தாண்டவம் என்று குருக்கள் குறிப்பிட்டார். பிரகாரத்தில் ஆலமர் கடவுள் தனித்தன்மையுடன் தோன்றுகிறார். அவரையும் முருகனையும் வழிபட்ட வண்ணமே திருப்புகழ் பாடிக் கொண்டு-வலம் வந்து கொடி மரத்தின் முன் நிலந் தொட்டு வீழ்ந்து வணங்கினோம். வயலூர் நிலவளம் " வற்றாத பொய்கை வளநாடு கண்டு " மலைமேல் இருந்த குமரா என்னும் அடியை நினைவுறுத்த முருகன் திருவடியே எண்ணி எழுந்தோம். கற்குடியை நோக் கியது உள்ளம் கால்கள் வேகமாக நடையிட்டன. அது கண்டு பேருந்தும் விரைந்தது. "கற்குடிக் கற்பகம்"

**" கற்குடி - காவிகுடிகொள் மாமலை "**

சில மணித்துளிகளில் கற்குடி மாமலையார் " திருக் கோயில் கீழ்க்கோபுரவாயிலில் பேருந்து நின்றது " நம

பார்வதி பதயே " முதலிய முழக்கம் செய்த வண்ணம் அன்பர்கள் இறங்கின வாயிலில் கூடி நின்றனர் மலை, சிறு சிறு குன்றுதான் எனினும் அதன் வண்ணம் துற வியரின் காவியாடையை நினைவூட்டியது.

" இடந்திகழ் முப்புரி நூலர் **துன்பமொ டின்பம தெல்லாம் கடந்தவர் காதலில் வாழுங்** கற்குடி மாமலையாரே " என் பார் திருஞான சம்பந்தர். எனவே கல்லாடை என்பது துறவியர் உடுத்தும் காவியுடைக்கு பெயர் கல் என்பது முதல் நிலையாய் கல்லாடை புனைந்த துறவியர்க்கு ஆகுபெயராகி அவர் குடியாக வாழும் மாமலை என்றும் கல்-காவி (வண்ணம்) குடிகொண்ட மலையென்னும் மாமலை பெருமையுறு மலை என்றும் வழங்கியிருக் கலாம் என்றும் தோன்றியது.

## " கற்குடிக் கற்பகம் "

கற்குடி மாமலை-தேவாரம் பாடிய மூவரும் வழிபட் டுப் போற்றிப் பாடியருளிய திருமலை என்று எண்ணும் போதே இத்திருமலையின் பெருமையை யுணரமுடிந்தது. ஒதுவாமூர்த்தி திருத்தொண்டர் தொகையை ஒவ்வொரு அடியாக ஒத மற்றவர்கள் தொடர்ந்து பின்மொழிந்து நடந்தோம். அனைவரும் " அடியார்க்கும் அடியேன் " என்ற தொடரை ஒருங்கே சேர்ந்திசைத்தது நெஞ்ச மெல்லாம் நிறைவான இன்பம் நிகழ்த்தியது. கனிந்த இனிய வுணர்வுடன் படிகளில் கால்படிந்தேறி கற்குடி மேவிய கற்பக நாதர் திருமுன் சென்று மகிழ்வுடன் நின்றோம். ஓதுவார் தலப்பதிகம் ஓதினார். குருக்கள் சேக்கிழார் மன்ற அன்பர் சார்பில் அர்ச்சனை புரிந்து கற்பூர ஆரத்தி யேந்தினார். அதன் ஒளியில் கற்பகநாத ரைக் கண்ணாரக்கண்டு தரிசித்தோம்.

## திருக்கற்குடி - செய்யானை - வெளியானை

[illegible]னவனை வானவர்க்கு மேலானானை
மண்ணதனில் ஐந்தை மாநீரில்நான்கை
வயங்கெரியில் மூன்றை மாருதத்திரண்டை
விண்ணதனில் ஒன்றை விரிகதிரைத் தண்மதியைத்
தாரகைகள் தம்மின் மிக்க
எண்ணதனில் எழுத்தை ஏழிசையைக் காமன்
எழிலழிய எரியுமிழ்ந்த இமையா நெற்றிக்
கண்ணவனைக் கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே

(திருநாவுக்கரசர்)

என்னும் திருத்தாண்டகம் போற்றும் தெய்வீக அனுபவ இன்பத்தை ஒருவாறுணர்ந்தோம்.

விபூதி பெற்று நெற்றியில் பூசியவண்ணம் வெளியே வந்தோம். வாயிற்காவலர் முடிசாய்த்து நிற்கும் சிற்ப அழகு கண்டு மகிழ்ந்தோம். தூண்கள் சதுரப்பட்டை வடிவாய் நிற்பன மிகுபழைமையைக் காட்டின. இவற்றால் பல்லவர்காலத்தினும் மிகு பழமை வாய்ந்த திருக்கோயில் இது எனத்தெளிந்தோம். இந்த ஊர் நந்திவர்ம மங்கலம் என்றும் இராச இராச சோழ மங்கலம் என்றும் பெயர் பெற்று இருந்துள்ளது. தற்போது உய்யக் கொண்டான்மலை என்றும் இறைவன் உச்சிநாதன் உஜ்ஜீவநாதர் என்றும் வழங்கப் பெறுகின்றது. தருமையாதீனத்தின் அறங்காவல் திறம்பெற்று அழகு றவிளங்குகின்றது. அஞ்சனாட்சி பாலாம்பிகை - இரண்டு அம்மன் சந்நிதியும் அழகுமிகு திருக்காட்சியருள்கின்றன. கோயில் திருப்பணி பாலாலயம் அமைத்தபோது பழைய அம்மன் மூர்த்தம் பின்னப்படவே புதிய மூர்த்தம் பிரதிட்டை செய்யப் பெற்றது. பழய மூர்த்தம் பேரழகின் அருட் பொலிவால் வழிபாட்டிலேயே நிலைபெற்றது என்னும் செய்திகளறிந்தோம். அப்பொது நாங்கள் வந்துள்ளமை

யறிந்து தலைமைக் குருக்கள் விரைந்து வந்து சேர்ந்து பெருமகிழ்ச்சி தெரிவித்தார். விபூதியளித்தார். தல விளக்கமும் உரைத்தார். கரன் பூசித்த தலம் இக்கற்குடி திரிசிரன் பூசித்தது, சிராப்பள்ளி (திருச்சி), தூடணன் பூசித்தது. எறும்பூர் என்றும் கற்பகநாதர் ஆதிகுமார வயலூரைப் பார்க்கின்ற சந்நிதி ஆகவே இவ்வழியாக வருவோர் முன்னதாக வயலூருக்கே சென்று வழிபடுவர் ஆங்கு திருவருள்பேற்றுக்கு ஆளானார் மட்டுமே கற்குடி வந்து கற்பகநாதரை வழிபடுவர் என்றும் கற்பகநாதர் வழிபடுவோர் நினைத்தன வெல்லாம் நிறைவாக அளிப் பவர் என்றும் அவர் அளித்த அருளுரை அனைவரின் உள்ளத்தையும் ஆனந்த மாக்கியது நினைந்ததெல்லாம் அளிப்பவர் எனவே கற்பகநாதர் எனப்பெற்றார் முன்னர் குடிபோதை அன்பரால் ஓட்டுனர் வயலூர்க்கு முன்னதாக இட்டுச்சென்ற (பக்கம் 11ல் காண்க) காரண மும் திருவருட் குறிப்பே என்றெண்ணியபோது மேலும் இரட்டிப்பாகியது.

*வானவனை வானவர்க்கும் மேலா னானை*
*வணங்குமடியார் மனத்துள் மருவிப் புக்க*
*தேனவனைத் தேவர் தொழு கழலான் தன்னைச்*
*செய்குணங்கள் பலவாகி நின்ற வெள்ளிக்*
*கோனவனைக் கொல்லைவிடை யேற்றினானைக்*
*குழல்முழவம் இயம்பக்கூத் தாடவல்ல*
*கானவனைக் கற்குடியில் விழுமியானைக்*
*கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே !*

(திருநாவுக்கரசர்)

*மாலை 5–30 மணிக்குப் புறப்பட்டோம் மதுரையை நோக் கியது உள்ளம்.*

## மதுரைப் பயணம்

இரவு அத்தயாம வழிபாடும் பள்ளியறைக் காட்சியும் தரிசனம் செய்ய வேண்டி மதுரை அங்கயற்கண்ணி திருவடியை இறைஞ்சியது உள்ளம். ஓட்டுநரிடம்

எப்படியும் மதுரை வழிபாடு செய்ய வேண்டும். வேக மாக ஓட்டுவதும் வேண்டும் அதுவிவேகமாக ஓட்டுவ தாகவும் இருக்கவேண்டும் என்றோம் ஓட்டுநர் அழகுற ஓட்ட, பேருந்து சென்ற வண்ணம் என்னே ?! என்னே! திருச்சி – மதுரைச் சாலையில் கடைசி சீட்டில் இருப்பவரும் குலுங்கிக்கலங்குதல் தெரியாத வண்ண மாக நீர்தேங்கும் குளத்தில் அன்னம் விரைவது போல பேருந்து சென்ற அழகை அனுபவித்தே தெரிந்தோம். ஓட்டுநரின் கைவண்ணம் விவேகமான வேகம் என் றால் எம்நண்பர் திரு. ப. சொ. பஞ்சாட்சரம் அவர்களின் ஸ்ரீ கிருஷ்ணா ரோட்வேஸ் பேருந்தின் கட்டமைப்பே பயணிகளுக்கு இன்பமான பயணத்தின் ஆதரவாய மைந்தது என்னலாம். அனைவரும் ஓதுவாருடன் ஒலி பெருக்கிமூலம் சிவபுராணம் ஓதியும் திருமுறைகள் பாடி யும் உரைவழங்கியும் மகிழ்ந்தோம். பேருந்தின் ஒலி, ஒளி நாடாப்பதிவின் தொலைக் காட்சிகளைக் கண்ட வண்ணமும் ஆக இரவு 9 மணிக்கு மதுரை வடக்கு மாசிவீதி வந்தோம். சில மணிநேரம் பயணம் புரிந்த தோ? பயணத்தின் களைப்போ சிறிதும் நாங்கள் உணர வில்லை.

### “ அங்கயற்கண்ணியும் - அழகனும் ”

மதுரை வந்ததும் அன்பர்கள் அனைவரும் ஆலவாய் அண்ணல் கோயிலுக்கு விரைந்தனர். மதுரை வடக்கு மாசிவீதி விஜயலட்சுமி டிரேடர்ஸ் உரிமையாளர் சென்னை திரு. கோவிந்தராசன் அவர்கள் திருமகனார் திரு. ஞானசேகரன் எங்கள் வருகைக்காக உணவும் தங்குமிட வசதியும் செய்து வைத்து மிகு விழைவுடன் அன்பர்களுடன் எதிர்நோக்கி இருந்த அன்பின் திறத் தை அங்கயற்கண்ணியின் திருவருளாகவே உணர்ந் தோம். நாங்கள் இரண்டுபேர் அவர்களைப் பார்த்து

நாங்கள் வந்ததை அறிவித்துவிட்டு தங்கும் இடத்தையும் பார்த்துவிட்டு கோயிலுக்கு

*முதிருநீர்ச் சடைமுடி முதல்வநீ முழங்கழல்*
*அதிர வீசி ஆடுவாய் அழகன் நீ புயங்கன் நீ*
*மதுரன் நீ மணாளன் நீ மதுரையால வாயிலாய்*
*சதுரன் நீ சதுர்முகன் கபாலம் ஏந்துசம்புவே !*

(திருஞானசம்பந்தர்)

என்று ஓதியே விரைந்தோம்.

நெடிதுயர்ந்த கோபுரங்கள்– திருவாயில்கள் கடந்து சுற்றுப் பிரகாரங்களில் சென்று சோமசுந்தரர் சந்நிதியில் அன்பருடன் சேர்ந்து வழிபட்டோம். வெள்ளியம்பலத்தின் கால்மாறி ஆடிய கற்பகத்திருவைக் கண்டு தரிசித்தோம்.

*மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை*
*வரிவளைக்கைம் மடமானி*
*பங்கயச் செல்வி பாண்டிமா தேவி*
*பணிசெய்து நாடொறும் பரவ*
*பொங்கழல் உருவன் பூத நாயகன் நால்*
*வேதமும் பொருள்களும் அருளி*
*அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த*
*ஆலவா யாவதும் இதுவே !*

(திருஞானசம்பந்தர்)

திருப்பதிகம் ஓதியவண்ணம் வலம் வந்து அங்கயற் கண்ணி – மீனாட்சி சன்னதி சென்றோம். சிவப்புக் கரையுடன் பளிச்சென்ற வலம்புரி போன்ற வெண்ணிறத்துச் சேலையுடுத்தி செங்காந்தள் கரங்காட்டி முல்லைக் கொடியின், இடை யொசிந்து பொலிவுற சின்னஞ்சிறு பெண்போல் அம்பிகை அங்கயற்கண்ணி நின்ற பேரழகு! ஆனந்தத்தின் பேருணர்வைத் தந்தது. கண் பெற்ற பயன் பிறவியின் பயனுடன் பெரும் பேறாகவே

வுணர்ந்தோம். மூர்த்தி நாயனர் சந்தனம் தேய்த்த கல்லைத்தொட்டும் தொட்டவிரலைக் கண்ணில் ஒற்றியும் மும்மையால் நெஞ்சார நினைந்து போற்றினோம். சில நிமிடங்களுக்குப்பின் பள்ளியறைக்காட்சி; சோமசுந் தரன் அங்கயற்கண்ணி கோயிலுக்கு எழுந்தருளி - பள்ளியறைத்தரிசனம் அருளினர். கலைநவின்ற பொருள் கள் எல்லாம் கலங்கா வண்ணம் உமையொருபாகனாய் விளங்கும் இறைவன் அருட்காட்சியது, அம்மையோடு அப்பனாகி அகிலமெல்லாம் வாழ்விக்கும் அற்புதத்தைப் போற்றி வழிபட்டோம்.பொன்னூசல் திருப்பாடல் காதா ரக்கேட்டும் பாலும், விபூதியும் - பேறாகப் பெற்றுக் கொண்டு திரும்பினோம் - கோயில்: திருப்டணி செய் யப்பெற்று குடமுழக்கு நிறைவெய்தி புதுப்பொலிவுடன் பொங்கு திருக்காட்சி தந்தது. கோயில் மேல்தளமும் சுற்றுத் தூண்களும் வண்ணக் கோலமெலாம் வழங்கின காணும் நெஞ்சமெல்லாம் தமிழகக் கோயிலெல்லாம் இதுபோல் அழகே வரவேண்டும் என்றெண்ணி இரவு 10-30 மணிக்குமேல் ஆனது தெரிந்து விரைந்து வந்து அன்புமிகு அமுதமாகிய இனிய உணவு உண்டு முடித்துத் தங்கினோம். 3—8—95 அதிகாலை ஐந்து மணிக்கு துயிலெழுந்து கடன் முடித்து ஐந்து முப்பது மணிக்கு ஆயத்தமானோம். எங்கட்கு இரண்டரை மணிநேரம் முன்னதாகவே எழுந்து பூசை முடித்து முறு வல் பூத்த முகத்தினராய்த் தோன்றிய தலைவர் எம். கிருஷ்ணன் அவர்களை வணங்கி விபூதி பெற்றணிந்து கொண்டு திருக்குற்றலம் நோக்கிப் புறப்பட்டோம்.

## "திருக்குற்றாலத் தேனிப்பு"

நிலம்புலர் காலைப்போதும் குற்றாலச்சாரல் நினைவும் வெளியும் உள்ளும் தண்ணளியாய்த் தழைத்தன. பேருந்தில் திருமுறை திருப்பள்ளி யெழுச்சி பாடியவாறே

பயணித்தோம் காலை 9-30 மணிக்கு ஐந்தருவி சேர்ந்தோம். சோலைகள் நிறைந்த சூழல், வெள்ளிய அருவிச் சாரல் இதம் பதமான இனிய காலைப்போதில் - மேனியெலாம் மென்குளிர் விரவ மகிழ்வுடன் கண்டோம். எண்ணெய் தேய்த்துக் கொண்டு சிலர் வந்தனர் மக்கள் முண்டியடித்துக் கொண்டும், உந்தியும் முந்தியும் கொட்டும் அருவியில் தலை நீட்டிக் குளித்த உந்து போட்டிக் குளியல் கண் கொள்ளாக் காட்சியாயிற்று. தமிழகத்தின் தவப்பேற்றின் ஒன்று குற்றால அருவி என்பதை நாம் அனைவரும் உணரும் நாளே நமக்கு இன்பம் வாய்க்கும் நாள் என்றும் எண்ணியதுள்ளம்.

***போதும் பொன்னும் உந்தியருவி புடை சூழக்***
***கூதன் மாரி நுண் துளி தூவுங் குற்றாலம்***
***மூதூ ரிலங்கை முட்டிய கோனை மிறை செய்த***
***நாதன் மேய நன்னகர் போலும் நமரங்காள்***

**(திருஞானசம்பந்தர்)**

என்றும் எண்ணினோம்

ஒழுங்கு படுத்தி எல்லோரும் ஒரு சில மணித்துளிகளேயாயினும் அமைதியுடன் அருவியின் அழகை, **"முன்னியவள் (திருவருள்) நமக்கு முன்சுரக்கும் இன்னருளே "** இதுவெனவுணர்ந்து அருவியாடும் மகிழ்வு அனைவருக்கும் வாய்க்காதா? என்று ஏங்கியது உள்ளம். எண்ணியவாறேநின்ருல் என்னபயன் துணிய வேண்டாவா? என்று ஒருவாறு உள்ளத்தைத் தேற்றிக்கொண்டு கூட்டத்துள் நுழைந்து குளித்தோம். முண்டியடித்துக் கொண்டு எல்லோருமாக சேர்ந்து குளிப்பதும் ஒரு உந்து முயற்சியின் சுகானுபவமாகவும் தோன்றியது. குற்றால அருவியில் எவ்வண்ணம் ஆடினும் குளுமைதானே.

அனைவரும் குளித்து முடித்துச் சிற்றண்டியும் கொண்டோம் சித்ரசபையில் வழிபாடு செய்ய புறப்பட்டோம்.

*உற்றார் யாருளரோ உயிர்கொண்டு போம்பொழுது*
*குற்றாலத்துறை கூத்தனல்லால் நமக்கு*
*உற்றார் யாருளரோ ? என்றும்*
*குற்றாலத்தமர்ந்துறையும் கூத்தா உன்குரை கழற்கே*
*கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே*

என்றும் அப்பரும், மணிவாசகரும், குற்றாலத்துச் சித்திரசபையின் கூத்தரை நினைந்து பாடியதும் - இதில் உயிர் கொண்டுபோம்பொழுது என்பதும் **"ஓம் எழுத்தில் அன்பு மிகவூறி ஓவியத்தில் அந்தம் அருள்வாயே"** என்று அருணகிரியார் பாடுவதும் மரணகாலத்தில் சித்திர குப்தம் - (குப்தம்-நினைவு சித்திரம்-ஓவியம்) தோன்றும் என்பதும் ஒருங்கிணைத்துச் சிந்திக்க் தக்கதாயுள்ளது என்றெல்லாம் பேசியவாறே பேருந்தில் வந்தோம். கூத்தர்-கூத்தாண்டார் கோயில் என்றே - சாலையோரம் சிறியகோயில் ஒன்றும் உள்ளது தெரிந்தோம்

சித்ரசபைக் குளத்தின்முன் பேருந்து நின்றது. குளம் வறண்டு கிடந்தது கண்டதும் - உள்ளம் வருந்தியது. வற்றாத வடவருவி வீழ் குற்றாலத்துக் குளமா இது ? என்றே எண்ணத் தோன்றியது. குளத்தின் வலமாக வந்து கோயினுள் புகுந்தோம். கட்டணம் தந்து உள்ளே சென்றோம். வண்ண ஓவியம் வடிவார்ந்த கொடுங்கைகளுடன் சித்ரசபை முன் கூடமும். உள்ளே சித்திரக் கூத்தர் சந்நிதியும் கண்டு மகிழ்ந்தவாறு சந்நிதியில் சிலர் நின்றும் பலர் அமர்ந்தும் ஐந்தெழுத்தை இசைபெறப் பாடினோம்.

"மன்றுளாரை முன் துதி செயும் நாயன்மார்" நினைவே முன் நிற்க நெஞ்சுருகி வழிபட்டு பாடிக் கொண்டே உள் வலம் வந்தோம்; வெளிச்சுற்றும் வலம் வந்தோம்; இறையுணர்வில் மகிழ்ந்தோம். உடன் பண்டைநாள்; அளவில் தொல்கலைகள் முற்றிய அற்பகக்

தண்டமிழ்த் திருநாடு தற்காலம் மெய்ம்மிகு தன்மை யுடைய தற்பெருங்கலைகளையெல்லாம் தற்கொலைக்கு ஆளாக்கியுள்ளதுபோல போற்றிக்காத்தல்இன்றி விட்டு விட்டு புதுமையென்ற பெயரில் திரியும் போலித்தனத் தின் பொய்க்கலையின் பின்சுற்றிக் கொண்டுள்ளதே! என்றும் எண்ணம் தோன்றியது. மதியம் நெருங்கியதால் சங்கரன் கோயில் அன்பர்கள் வரவேற்று உணவளிக்க எங்கள் வருகை நோக்கியிருப்பார்கள் ஆகவே நாம் விரைந்து செல்லுதல் வேண்டும்; எனவே குற்றாலநாதர் குறும்பலா ஈசரை நினைந்தவாறே கும்பிட்டுக்கொண்டு சங்கரன் கோயில் நோக்கிப் புறப்பட்டோம்.

## "அன்பருள் தோய்ந்த சங்கரன் கோயில்"

மதியம் 1-00 மணியளவில் சங்கரன் கோயில் சென்று சேர்ந்தோம். ஓதுவாமூர்த்தியும் திரு. பாலசுப்பிர மணியன், திரு. காளியண்ணன் மற்றும் அன்பர்கள் முகமலர்ந்து இருகரங்கூப்பி வரவேற்ற உணர்வைக் கண்டு பெருமகிழ்வுடன் கோயினுட் சென்றோம். கோபுரக்கதவுகள் கலைநயம் மிக்க பழமை வாய்ந்த அழ கிய சிற்பங்கள் நிறைந்து உயர்ந்தும் விரிந்தும் திறந்து நின்றன. இப்பேரழகைக் கண்டதும் கண் இமை; வட்ட மாய் விரிந்து உள்விழி காட்ட வியப்புற்றோம் இம்மரச் சிற்ப அழகு உள்ளேயும் இருக்குமோ? என்றெண்ணிய வண்ணமே சென்றதுள்ளம்.

சந்நிதியின் முன் இருந்த நந்திதேவரின் ஏந்து முகத் தின் எழிலார் காட்சி கண்டு கொண்டே திருமுறைப் பாடல் ஓதுவாருடன் உடன் ஓதித் திருமுன் சென்றோம். இறைவனை நோக்கியபடி உமாபதி சிவம் மற்றும் உக்கி ரபாண்டியர் நின்ற வண்ணம் காட்சி தருகின்றனர். அவர் தம்மை கும்பிட்டபடியே சந்நிதியில் நின்று வண ங்கினோம். சங்கரலிங்கேஸ்வரர் வெள்ளி நாகப்படம்

கவித்தளித்த காட்சியும் சுற்றில் நாகப்புத்துக்கோயிலும் வழிபட்டுக் கொண்டு கோமதியம்மன் அழகிய சந்தனக் காப்பின் திருக்காட்சியும் கண்டு கும்பிட்டோம். அம்ம னின் ஆராத இன்பம் தரும் அருங்காட்சி பெருமகிழ் வாயிற்று. முன் வாயிலில் மேல்.

*கேடாவரு நமனைக் கிட்டவராதே தூரப்*
*போடா என்றோட்டி யுந்தன் பொற்கமலத்தாள் நிழற்கீழ்*
*வாடா என அழைத்து வாழ்வித்தால் அம்மவுனைக்*
*கூடா தென்றார் தடுப்பார் கோமதித்தாய் ஈசுவரியே*

என்ற பாடல் தெரிந்தது. பிற்காலப் புலவர் ஒருவர் இயற்றியதுபோலும். போடா வாடா என்று பழமைப் பைந்தமிழ் பாடுதலைக் கண்டது இல்லை இத்தன்மைப் பாடல் முன் தோன்றக் கண்டு படித்தோம் மனத்திலும் குறித்துக் கொண்டோம் – அம்பிகை அருளமுகும் ஆடித் தபசுப் பெருவிழா 48 நாள் நடைபெறுவதும் அறிர்து எம் மனமெலாம் மகிழ்ந்தன. முன் அர்த்த மண்டபத் தின் கொடுங்கையழகும் மேல்தளக் கீழ்டரட்டின் சலை யழகும் நந்திமேல் உருத்திராக்சவிதானம்; மரச்சிற்ப அழகின் மிகு நேர்த்திவாய்ந்த பூலித்தேவர் அறைத் தோற்றமும் – உலகமே கண்டுணர வேண்டிய கலைப் பேறாகக் காட்சி தந்தன. கண்டு மகிழ்வுணர்வின் நடந்து சங்கரநாராயணர் திருமுன் வந்தோம்.

***இடம்மால் வலந்தான் இடப்பால் துழாய் வலப்பால் ஒண்கொன்றை***
***வடம்மால் இடந்துகில் தோல்வலம் ஆழி இடம் வலம்மான்***
***இடமால் கரிதால் வலஞ்சேதிவனுக்கு எழில் நலஞ்சேர்***
***குடமால் இடம் வலங்கொக்கரையாம் எங்கள் கூத்தனுக்கே !***

(சேரமான் பெருமாள்)

என்னும் சேரமான் காணும் திருக்காட்சி சங்கர நாராயண னாகத் தோன்றும் இறைவன் திருக்காட்சி இது.இந் நாட்டின் சைவ வைணவப் போராட்ட காலத்தினுக்கு முன்பிருந்த பண்டைய தமிழ் மரபின் அன்பு நெறியை யே யல்லவா யுணர்த்து கின்றது !

" *அரன் அதிகன் உலகளந்த அரியதிகன்*
*என்று ரைக்கும் அறிவிலோர்க்கு பரகதி*

*சென்றுய்க்குமாறு இல்லை* என்னும் கம்பர் வாக்கும் இதுதானே ! ஒளிப்பிழம்பும் (சிவமும்) ஒளிப்பரப்பும் (விஷ்ணு - வியாபகம்) ஒன்றாய்க் காணும் ஒருமை யுணர்விற்கு இத்திருக்காட்சியே பேரின்பம் தருகின் றதே என்று மகிழ்ந்து இருகரமும் சிரம்மேல் குவித்து வணங்கிக் கும்பிட்டோம் சங்கன் - பதுமன் என்னும் நாகங்கள் பூசையையும் கும்பிட்டபடியே நடராசர் சந் நிதிக்கும் சென்றோம். சிலைவடிவாய்த் தோன்றும் ஆடல் வல்லானின் அழகிய தோற்றமும் அடிக்கீழ் காரைக்கால் அம்மையார் இருந்து பாடும் காட்சி எழிலும் கண்டு உள்ளம் பரவசமானது.

பெரும்பாலும் நடராசர் முன் மாணிக்கவாசகரே இருப்பார் திருவாலங்காடு அம்மையார் அமர்ந்தபதி அங்கே இத்திருக்காட்சியுண்மை ஐதீகம். இங்கே இத் தோற்றம் எனின் என்ன விசேடம்.? என்றே வினாவி யதுள்ளம். கோமதியம்மன் அருட்சிறப்பால் அமைந் ததோ ? என்றும் அமைதியுற்றது. காரைக்கால் அம்மை யார் உடன் நடராசரைத் தரிசித்து மகிழ்ந்து விபூதி பெற்றணிந்து கொண்டே வந்தோம். உணவு கொள்ள காலம் கடந்துகொண்டிருப்பதை ஓதுவாமூர்த்தி உணர்த்தி வேகப்படுத்த விரைவாகப் பேருந்தில் புறப் பட்டோம்

## "அன்புப் பேற்றின் அருள் விருந்து"

திருவாவடுதுறைக்கிளை மடத்தில் திருவாளர் ஆ.சித்ர புத்ர முதலியார் அவர்கள் தன் துணைவியாருடன் அன்பர் அனைவரையும் இனிமையுற வரவேற்று கனிவுடன் தொண்டு புரிந்து உபசரித்தவிதம் அனைவரையும் நெகிழ்வித்துக் கனிச்சாற்றை வார்க்கும் அன்புப் பேற்றின் இனிப்பாக இனித்தது. உணவும் அவ்வண்ணமே புலன்களுக்கும் களிப்பளித்தது அகமும் புறமும் மகிழ்வின் வடிவானோம். உண்ட பின்னர் அத்தம்பதியர் நெசவுத் தொழில் புரிந்து வாழ்வோரேயாவர் என்பதறிந்தபோது இப்பாண்டி மண்டலமே இளையான் குடியோ ! இங்கு மக்களெல்லாம் மாறனார் தானோ ? என்றே தோன்ற ! இறைவா அன்பர் திறத்தை அறிவிக்க நாவேது! எப்புண்ணியத்தால் எங்களை இங்கு அறிமுகம் செய்தாய்?! என்றே இறைஞ்சினோம். அன்பர்கள் அனைவரையும் " இல்லறப் பேரன்பால் இன்புற்று வாழ்க ! என்று எல்லோருமாக வாழ்த்தி; உள்ளம் பிரியாவிடை பெற்றுக்கொண்டு புறப்பட்டோம். மாலை 4-30 மணிக்கு பேருந்து இராமேச்சரத்தை நோக்கி விரைந்தது.

## திருவிராமேச்சுரம்

இரவு 10-10 மணிக்கு இராமேச்சுரம் சந்நிதி வீதியிற் சேர்ந்தோம். திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் சுவாமிகள் அருளாணையின்படி திருமடத்து அலுவலர் மற்றும் நண்பர்கள் எங்களை எதிர் நோக்கிக்காத்திருந்து அன்புடன் வரவேற்றனர். உணவு அளித்து தங்குமிட வசதியும் அளித்து உபசரித்தனர் காசிமடத்து அதிபரின் அருளார்ந்த ஆசியை நினைந்து போற்றிய வண்ணம் இறையருளின் நினைவின் துயின்றோம்.

*வீரமிக் கெயிறு காட்டி விண்ணுற நீண்டரக்கன்*
*கூரமிக் கவனைச் சென்று கொன்றுடன் கடற்படுத்துத்*
*தீரமிக் கானிருந்த திரு இராமேச்சுரத்தைக்*
*கோரமிக்கார் தவத்தார் கூடுவார் குறிப்புளாரே*

(திருநாவுக்கரசர்)

4-8-95 வெள்ளி அதிகாலை 4-30 மணிக்கு குளித்து முடித்து பூசையும் முடித்து நின்ற எம் தலைவரை வணங்கி விபூதி பெற்றணிந்து சோதிலிங்க வழிபாடு செய்ய கட்டணச் சீட்டுடன் இராமநாதர் கோயிலுள் சென்றோம். அன்பர் பெரும்பாலோரும் நீண்ட வரிசையில் நின்றிருந்து ஐந்தெழுத்து ஓதிய வண்ணம் சென்றோம். இராமலிங்க மூர்த்தி படிகவண்ணத்தின் பால்நிற மூர்த்தி பால்அபிடேகம் ஏற்றுக் கவின்மிகு காட்சியளித்து கண் வழியே புகுந்து எம் கருத்தில் நிறைந்தார், நெஞ்சுருக வழிபட்டோம்.

### " கோடி தீர்த்தம் கலந்து குளித்தல் "

விபூதி பெற்று அணிந்து கொண்டு தீர்த்தமாட அன்பர் தனித்தனியே விரைந்தனர். முதலில் அக்கினி தீர்த்தம் என்றகடல் நீராடினோம். கோயிலுள் 22 தீர்த்தமாடக் கட்டணம் செலுத்திச் சீட்டு பெற்றுக்கொண்டு இலட்சுமி சரசுவதி தீர்த்த முதலாக ஆங்காங்கு 21 தீர்த்தங்களை ஊழியர்கள் வாளியில் முகந்து தலையில் ஊற்றவும் கொட்டவும் தெளிக்கவும் ஆக நீராடினோம். ஒவ்வொரு தீர்த்தமும் மேனியிலும் நாவிலும் வெவ்வேறான இதமும் சுவையும் ஊட்டின.

*"சென்றாடு தீர்த்தங்கள் ஆனான்*
*கண்டாய்" என்பதும்*
*" ஆர்த்த பிறவித்துயர் கெட நாம்*
*ஆர்த்தாடும் தீர்த்தன் "*

என்பதும் இதுதானோ? என்று இறையருளனுபவத்தின் பேரின்பத்தையே தலைப்பட்டோம். அனைத்தும் இராமநாதர் திருக்கோயில் உள்ளிருக்கும் தீர்த்தங்களே. இவற்றின் ஒவ்வொன்றும் ஒவ்வொரு திறம் என்றால் மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம் தேற்றனே! என்பது இறைவனுக்கு எத்துணைப்பொருத்தமானது? என்பதை எண்ணியும் வியந்தோம். வியந்தவுணர்வில் விரைந்து வந்து கோடி தீர்த்தத்தில் கோமுகத்தில் வரும் தீர்த்தத்தைப் பாத்திரத்தில் ஏற்று திருவருளை எண்ணி தலைமேல் ஊற்றி நீராடலை முடித்தோம்

அன்பர்கள் ஒருங்கு கூடியதும் ஓதுவாமூர்த்தி தலத் திருமுறைபாடி முன்செல்ல பின் சென்று இராமநாதரை வழிபட்டுப் பேரழகுப் பொலிவுடன் நிறையருள்புரியும் அம்பிகை - மலைவளர் காதலியைத் தரிசித்து குங்குமம் பெற்றணிந்து நடராசர் சேதுமாதவர் ஆஞ்சநேயர் முதலிய சந்நிதியில் வழிபட்டுக் கொண்டு வந்தோம். கீழ் வாயில் முகப்பில் அமைந்த சிற்பக்கலைத்திறன் மிக்க சேதுபதிமண்டபம்; உலகப்பிரசித்தி பெற்ற மூன்றாவது வெளிப்பிரகாரமும்; சுதையாலமைந்த பெரியநந்தி முதலான கலையழகும் கவின்மிகு அருள் திறமும் வாய்ந்தது இராமேச்சுரம். ஒப்பற்ற இப்புண்ணிய திருத்தலத்தை காணும் யாரும் நெஞ்சில் நினைந்து கைகூப்பி வணங்காமற் போகார்

*கடல்சூழ்ந்த தீவாய் கடவுள் இருப்பிடமாய்*
*கருணையருள் தீர்த்தமெலாம் கசடாம் அழுக்கொழிக்க!*
*மடல் சூழ்ந்த அகமலராய் மன்னுமிரா மேச்சாரமே*

என்று எண்ணியவாறு வெளியே வந்தோம்.

*கோடி மாதவங்கள் செய்து குன்றினர் தம்மையெல்லாம்*
*வீடவே சக்கரத்தால் எறிந்து பின் அன்பு கொண்டு*
*தேடிமால் செய்த கோயில் திரு இராமேச்சுரத்தை*
*நாடிவாழ் நெஞ்சமே நீ நன்னெறியாகு மன்றே.*

(திருநாவுக்கரசர்)

என்னும் அப்பர் தேவாரத்தை நெஞ்சுக்குணர்த்திய படியே சிற்றுண்டி உண்டு பேருந்திற்கு வந்து காலை 9-30 மணிக்கு உத்தரகோசமங்கையை நோக்கிப் புறப்பட்டோம்.

## பாம்பன் பாலம்

இராமேச்சுரம் திருத்தலச் சிறப்பும் கடல் நீர் சூழ்ந்த கவினும்; கடவுள் வழிபாட்டின் மகிழ்வும் ஸ்ரீ காசிமடத்து அதிபர் அருளாணையின் இனிப்பும் பற்றி உரையாடிய வண்ணம் அனைவரும் பரவசமாய்ப் பேசிவர விரைந்து கொண்டிருந்த பேருந்து நின்றது. இரண்டு பக்கமும் பார்த்தால் நீலக்கடல் நீண்டு பரந்திருக்க. பேருந்து ஆகாய விமானம் போல் வானில் உயர்ந்து நிற்பதாகத் தோன்றியது. பாம்பன் கடற்பாலத்தின் மேல் இடையே இருக்கிறோம் என்பதறிந்து எல்லோரும் கீழிறங்கி கடற் பரப்பின் அழகை நின்று நெடிதாக உற்றுப்பார்த்தோம் வடபால் இரயில் பாலமும் தென்பால் தோணி படகுத் துறைகளுமாய்க் காட்சி தந்த கடல்; நீலமும் வெளிர் நீலமுமாக வண்ணத் தோய்வாய் வழங்கிய அழகு அற்புதமாய் இருந்தது. வான்கதிரும் கருமேகத்துள் ஒளிந்த வண்ணம் குளிர் நிலவாய் ஒளி வீசி குளுமை தந்தது. இயற்கை யெழிலுடன் அறிவின் செயலாற்றும் இனிமையும் தோய்ந்தால் இன்பத்திற்கு எல்லையும் மனித சக்தியின் அறிவாற்றலின் செயல் திறனையும் சொல்லி முடியுமா? கண்டது சில மணித்துளிகளே ஆயினும் கொண்ட இன்பம் கொள்ளையானது. கடலலைக்கு எம் கையசைவைக்காட்டி பேருந்தில் ஏறினோம் சில மணித்துளிகளில் பாம்பன் பின்னிற்க மண்டபம் கடந்து இராமநாதபுரம் நோக்கிப் பேருந்து விரைந்தது.

## "உத்தரகோச மங்கை"

காலை 11-00 மணிக்கு உத்தரகோச மங்கை கோபுர

வாசலில் பேருந்து நின்றது உயர்ந்த அழகிய இராச கோபுரத்தின் முதல் நிலையில் சதா சிவமூர்த்தி பன்முகம் கொண்டு காட்சிதரும் திருமூர்த்தம் காட்சியளிக்கப் பெற்றோம். அனைவரும் ஒருங்குகூடி சிவபுராணம் ஓதிய வாறே உட்புகுந்தோம். சேதுபதிகள் சிறப்பாக திருப் பணி செய்த திறம் கோயிலின் ஒவ்வொரு பகுதியும் எடுத்துக்காட்டியது. மணிவாசகர் ஆத்மார்த்த திருத் தலம். நீத்தல் விண்ணப்பம் அருளப்பெற்ற தெய்வத் தலமல்லவா ?

*கடையவ னேனைக் கருணையி னாற் கலந்தாண்டுகொண்ட*
*விடையவனே விட்டிடுதி கண்டாய் விறல்*
*வேங்கையின் தோல்*
***உடையவனே மன்னும் உத்தகோச மங்கைக்கரசே***
***சடையவனே தளர்ந்தேன் எம்பிரான் என்னைத்***
***தாங்கிக்கொள்ளே !***

(மாணிக்கவாசகர்)

மன்னும் உத்தரகோச மங்கைக்கரசே ! சடையவனே தளர்ந்தேன் எம்பிரான் என்னைத் தாங்கிகொள்ளே ! என்று தொடங்கி ஒவ்வொரு பாடலிலும் உத்தரகோச மங்கைக்கரசே என்று வாய் மணக்க விளிக்கப்பெறும் மணிவாய்மைத் திருத்தலமல்லவா ? என்று எண்ணும் போதே இனிமையானது உள்ளம்.

## " சதுரம் மறை "

வெளிச்சுற்றில் தலமரம் இலந்தை மரநிழலில் வழி பட்டுக்கொண்டு அருள்மிகு மங்களநாதர் சந்நிதி வந் தோம். சதுர ஆவுடையாரில் எழுந்த ஜோதியுருவாய்த் தோன்றி மலர் சூழ்ந்த பேரழகுடன் விளங்கிய சிவலிங்க மூர்த்தியை சிரம்மேல் கரம்குவிய வழிபட்டோம் குருக் கள் விபூதியளித்துக் கொண்டே மங்கை (பார்வதி) மூடி (கோசம்) சாய்த்து உத்தரம் (உபதேசம்) கேட்ட திருத்

தலம் இது எனவே உத்தரகோச மங்கையாயிற்று என்று தெரிவித்தார். வண்டோதரிஅருள் பெற்ற திருத் தலமும் இதுவே. ஆவுடையார் சதுரம் (பிரம்மபிடம்) விமானம் சதுரம் கலசமும் சதுரம் ஆக பெருஞ்சதுரப் பாடுடையது இத்திருத்தலம் என்று எண்ணியவாறே அருள்மிகு மங்களேஸ்வரி சந்நிதி வந்தோம். தூணெ லாம் சிற்பக்கலைத்திறமும் மேல் தளத்தின் கீழ் விதானம் வண்ண ஓவியமுமாய்த் திருக்காட்சி தந்த அம்பிகை கோயிலும் அருளார்ந்த தோற்றத்தின் அழகுபொழி அம்பிகை முன்னிலையும் தன்னிலை மறந்து அந்தாதித் தமிழை பாடுவித்தது. ஓதுவாரும் பிறரும் தனித்தனியும் சேர்ந்தும் பாடியது பரவசமாயிருந்தது. வணங்கியவாறே நடராசர் கோயிலுக்கு வந்தோம்.

உமாமகேசர் காட்சி முன்தர மாணிக்கவாசகர் வழிபட இடையே நடராசர் சந்தனக்காப்பின் காட்சி யருளும் பேரழகைக் கதவின் இடை வழியே கண்டு தரிசித்தோம் மரகதச்சிலைவடிவாய்த் தோன்றும் நடராசர் மார்கழித் திருவாதிரையில் ஆருத்திரா அபிடேகம் கொண்டு பின் சந்தனக் காப்பிலேயே இருந்து தரிசனம் தருகிறார். என்ற செய்தியுடன் திருவடிக்குக் கீழ் அமர்ந்த காரைக்காலம்மை திருக்கோலமும் கண்டு அற்புத மகிழ்வுற்றோம் ஒரு சிவலிங்கத்தே ஆயிரம் சிவலிங்கம் கொண்ட சகஸ்ரலிங்க தரிசனமும் கண்டு வழிபட்டு வெளியே வந்தோம். பேருந்தில் ஏறினோம் இறை யருளை எண்ணியவாறே திருமுறைகளை ஒலிபெருக்கியில் பாடிக்கொண்டே புறப்பட்டோம்.

## தாயுமானவர் அதிட்டானம்

மதியம் 1-30 மணிக்கு இராமநாதபுரத்தில் சைவ உணவு விடுதியாகத் தேடிக்கண்டு அவரவர்க்குவாய்த்த உணவு விடுதிகளில் உணவு உண்டோம் உண்டு

முடித்தவுடன் இராமநாதபுரத்தில் தாயுமானவர் அதிட்டானம் காணும் ஆவலில் புறப்பட்டோம் பள்ளிக்கூடம் பக்கத்தில் ஆசிரமும் தாயுமானவர் அதிட்டானமும் சேர்ந்து இருந்தன. ஆசிரம வாசிகள் ஓரிருவரை வினவினோம். தாயுமானவர் சந்நிதி மாலை 04-30 மணி மேல்தான் திறக்கப்படும் என்றனர். எம் வேண்டுதற்கிணங்க முன் மண்டபத்தில் இருந்து அமைதி வழிபாடு செய்ய அனுமதித்தனர். மண்டபம் சான்றோர் பலரின் திருவுருவப்படம் சூழ புதுப்பொலிவுடன் இருந்தது. அனைவரும் விபூதியணிந்து அமரத்துவம் வாய்ந்த தாயுமானவர் பாடல்களின் சிலவற்றை சிலர் நெஞ்சுருக பாடினர். பின்னர் அமைதியாக சில மணித்துளி தேனிப்பு செய்து உலகெலாம் அமைதியும் அன்பும் தழைக்க வேண்டினோம். ஆசிரமத்தில் சில புத்தகம் வாங்கிக் கொண்டு அன்பர்களிடம் விடைபெற்றுப் புறப்பட்டோம்.

## தேவிபட்டினம்

சிலமணித்துளிகளில் தேவிபட்டினம் கடற்கரையில் பேருந்து சென்று நின்றது. கடலில் சிலமீட்டர் தூரத்தில் அலைகளால் மூழுக்காடிக்கொண்டு நவகோள்கள் – நவ பாடாணக்கல் வடிவில் மக்கள் வழிபடவுள்ளன என்ற ஐதீகம் கண்டோம். அங்கிருந்த ஒருவர் ஒருவழியாக கடலில் முன்நடந்து செல்ல பின் தொடர்ந்து உள் சென்று நவபாடாணத்தை வலம் வந்து வணங்கினோம் சிலர் காசுகொடுத்து வழிபட்டனர். தேவிபட்டணம் திருப்புல்லாணி – தனுக்கோடி முதலியன இராமாயண வரலாற்றுச் சான்றின் தலவடிவமாக உள்ளன என்பதறிந்து சிலர் இமைவிரித்து வியந்து கேட்டனர். கடலின் கரையேறி நன்னீரில் கால் கை தூய்மைசெய்துகொண்டு அனைவரும் தேநீர் அருந்தியதும் பேருந்து புறப்பட்டது. திருவாடானையை நோக்கினோம்.

## ஆடானை - தங்கையால் தொழுது ஏத்துதல்

*திருஞானசம்பந்தர் திருவாடானைப் பதிகத்தில்(2ஆம் திருமுறை) மக்கள்*

இறைவனை கைப்போது மலர் நீரால் - ஆடானை காதலித்துத் தாமே பூசித்துப் பெறுகின்ற பெரும் பேறெல்லாம் உணர்த்துகின்றார்.

***சுண்ணநீறணி மார்பில் தோல்புனை***
***அண்ணலானுரை ஆடானை***
***வண்ண மாமலர் தூவிக் கைதொழ***
***எண்ணுவா ரிடர் ஏகுமே*** *(திருஞானசம்பந்தர்)*

*மங்கை கூறினன் மான் மறியுடை*
*அங்கை யானுறை ஆடானை*
*தங்கை யாற்றொழுது ஏத்தவல்லார்*
*மங்கு நோய்பிணி மாயுமே*

என்பனவாக அத்திருப் பதிகத்தின் பாடல் தொறும் அறிவுறுத்தும் சிறப்பு - காசி ஸ்ரீ சைலம் - கோகர்ணம் முதலாய திருத்தலங்களில் மக்கள் தாமே நீரும் மலரும் கொண்டு பூசித்தலையே நினைவூட்டியது முப்புராதியார் மாறியதுபோல தமிழகத்தின் மக்கள் சிவலிங்கமூர்த்தியை தங்கையால் பூசிக்கும் தன்மை - எவ்வாறு மாறியதோ - என்றெல்லாம் ஒலி பெருக்கி மூலம் உரையாடி வந்தோம்.

***ஆக்கையால் பயனென் அரன்கோயில் வலம் வந்து***
***பூக்கையால் அட்டிப் போற்றி யென்னாத***
***இவ் வாக்கையாற் பயனென் !***

என்று அப்பர் அறிவுறுத்துவதும் நந்தமிழ் நாட்டில் மக்கள் யாவரும் அரன் கோயில் வலம் வந்து சிவலிங்க மூர்த்தியை நீரும் மலரும் கொண்டு நித்தமும் பூசிக்க வேண்டி அரக்கோணம் வட்டம் அகவலத்தே அருள் மிகு மனத்துணைநாதர் திருக்கோயில் திருப்பணி

திருத்தொண்டர் திருநெறிய அறக்கட்டளை சார்பில் தொடங்கப் பெற்று நடைபெறுவதை அறிவித்தும், அன்பர்தம் திருத்தொண்டினை ஆதரவை வேண்டியும் உரையாடிக் கொண்டு வந்தோம். 3-கிலோமீட்டர் தொலைவிலேயே திருவாடானை திருக்கோயில் இராச கோபுரம் திருவடிபோல காட்சி அளித்தது. பரவசமாய் பார்த்தவாறே பேருந்து விரைந்து வந்தது, ஒன்பது நிலைகளுடன் 130அடி உயரத்தில் பெருமிதமாய்க் காட்சி தந்த இராசகோபுரத்தின் முன்நின்றதும் அனைவரும் இறங்கி கோபுரவாயிலுள் புகுந்து கோயினுள் சென்றோம் கோபுரமும் கோயிலும் மிகுபழைமையாய் தோன்றின. ஓதுவாமூர்த்தி திருமுறைபாடி முன்செல்ல உடன் சென்று கோயிலை வலம் வந்து இறைவன் திருமுன் சென்றோம் தலப்பதிகத்தை முழுவதும் ஓதினார்; குருக்கள் அருச்சனை புரிந்து திபாரர்தனை செய்தளித்தார். நமபார்வதீ பதயே! அரகர மகாதேவா! முதலிய முழக்கம் நிறைவாயெழுந்து ஒலிக்க கைகூப்பி வணங்கி மகிழ்ந்தோம்.

## "திருஆடானை அன்பாயவல்லி"

ஆவுடையார்; சதுரம் இலிங்கமூர்த்தி சுயம்பு ஆதியாகிய சூரியன் நீலநிற இரத்தினத்தால் ஆவுடை சேர்த்து வழிபட்டதால் இறைவன் பெயர் ஆதி இரத்தினேசுவரர் வருணன் மகன் வாருணி துர்வாசமுனிவர் சாபத்தால் ஆட்டுத்தலையும் யானை உடலும் கொண்ட விலங்காய்த் தோன்றி இவ்வாலயத்தில் ஈசான திக்கில் உள்ள சூரிய தீர்த்தத்தில் நீராடி இறைவனை வழிபட்டு சாபநீக்கம் பெற்றான். ஆகவே (ஆடு + ஆனை) ஆடானை இறைவன் என்னும் பெயர். ஆகவே இத்தலத்திற்கும் திருவாடானை என்பது பெயராயிற்று என்றும் இத்தலபுராணத்தை திருவாரூர் சுவாமிநாத தேசிகர் இயற்றியுள்ளார் என்றும்

தெரிவித்தவாறே குருக்கள் விபூதியளிக்கப் பெற்றுணிந்து கொண்டோம். மாசிமாதம் கடைசி சப்தமியில் சூரியன் வழிபடுகின்றார் என்பதும் அறிந்தவண்ணமாக அம்பாள் சந்நிதி வந்தோம். முன் மண்டபம் அழகிய சிற்ப வேலைப் பாடுகளுடன் மேல்தள கீழ்ப்பகுதி வண்ண ஓவியம் சிறப்பாக அமைந்து மிகு நேர்த்தியாய் இருந்தது. மைக்கருங்கல்லில் அமைந்த அழகிய வாயிற்படி நிலைகள் கொடி வேலைப்பாட்டுடன் அக்கமணிமாலை வடிவின் மாலை கொண்டு கல் நெஞ்சையும் கனிவிக்குமாறு கலையழகுடன் தோன்றின. அம்பிகைக்கு முன் நின்றுபாடி மகிழ்ந்தோம். நான்கு திருக்கரங்களுடன் அம்பிகை நின்ற கோலத்தின் நிறைபேர் அருள் புரிகின்றுள். குருக்கள் தீபாராதனை செய்தளித்த திருக்காட்சி நெஞ்சமெல்லாம் நிறைவித்தது. பள்ளியறை அழகிய சிற்பக்கலைவேலைப்பாடுடன் விளங்கியது கண்டு மகிழ்ந்தோம். அம்பாள் திருப்பெயர் சிநேகவல்லி எனவும் தமிழில் அன்பாய வல்லி என்பதும் இங்குள்ள மகளிர் பலர் "அன்பாயி" என்று பெயர் வைத்துக் கொள்வர் என்பதும் தெரிவித்த வண்ணமே குங்குமம் அளித்தார். பெற்றணிந்து கொண்டு வெளியே வந்தோம் அவர் தெரிவித்த செய்திகள் சிந்தனையைக் கிளர்ச்சி பெறச் செய்தன. அன்பாயவல்லி என்பதை சிநேக வல்லி என்றும் ஆடானை இறைவனை அஜகஜேஸ்வரர் என்றும் (ஆடு - அஜம் - யானை - கஜம்) வடமொழிப் பெயரை வழங்கினுர் யார்? தமிழகக் கோயில் திருமுறைகளில் எங்கேனும் வடமொழிப் பெயர்கள் உள்ளனவா? தமிழகத்தின் திருக்கோயில் எல்லாவற்றிலும் இறைவன் இறைவியின் திருப்பெயர்களை வடமொழியில் ஆக்கி அளித்ததன் நோக்கமென்ன? என்பனவெல்லாம் எண்ணும்போதே இறைவா? எல்லோருக்கும் நல்லுணர்வின் வாலறிவை வழங்கமாட்டாயா? ஆதிசைவராய்த்

திருக்கோயில் பூசை பயிலும் அந்தணர் குலத்தில் தோன்றிய நம்பியாரூரரை வலிய தடுத்தாண்டு கொண்டு " அருச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண் மேல் சொற்றமிழ் பாடுக! என்று சொல்லியருளிய திறம் மற்ற ஆதிசைவர்களுக்கும் பொருந்தாதா? ஏன் கடவுள் அர்ச்சனை இறைவன் வேண்டிய பொருள் தெளிவுணர் வின் மொழியாகிய தமிழிலேயே அருச்சனை செய்வதை விட்டு எல்லாக் கோயிலிலும் பொருள் தெளிவுணரா வடமொழியிலேயே அருச்சனை புரிகின்றனர்? இதனால் தான் மக்கள் இறையருட் செல்வத்திற்கு பாத்திரராகாமல் வறுமையுற்று யுழல்கின்றனர் போலும் என்றெல்லாம் உள்ளம் எண்ணி வருந்தியது படிக்காத பாமரமக்கள் "அன்பாயி" என்ற அழகிய திருப்பெயர் சொல்லி மகிழ் வர் என்றால்; தாம்பொருள் தெரிந்து படித்து மகிழ்வு பெறும் பண்புறு சொற் பெறாத் தன்மையால் திருவருள் நலமெல்லாம் இழக்கின்றனரே! திருமுறைகள் காட்டும் நல்வழியைப்பெறாது போகின்றனரே! என்று எண்ணி எண்ணி

" அசைவில் செழுந்தமிழ் வழக்கே!
அயல் வழக்கின் துறை வெல்ல " அவதரித்த

திருஞானசம்பந்தரின் திருவடியைப் போற்றி! திருக் கோயிலெல்லாம் திருமுறைச் செந்தமிழே வழங்க எல்லோர்க்கும் நல்லுணர்வைக் கொடுக்குமாறு வேண்டி னோம். "திருப்புனவாயில்" நோக்கிப்புறப்பட்டோம். (வழக்கில் திருப்புனவாசல் என்று வழங்கப் பெறுகின் றது.) நெய்தல் மணலும் மருத வயலும் மயங்கிய சாலை வழியே பேருந்து விரைந்தது பாம்பாற்றின் தென்கரை வந்ததும் திருப்புனவாசல் கோபுரம் (கருவறை விமானமே அது என்று நெருங்கியபோதே தெரிந் தோம். அழகிய கலசத்துடன் நிறைகுடம் ஏந்திக்காட்டி

வர்வேற்பதுபோல் தோன்றியது எனினும் ஆற்றங்கரை கடக்கும் வழித்தடம் இல்லாமையால் நேர் கிழக்கே சென்று தொண்டி செல்லும் சாலையையடைந்து வடக்கு நோக்கிப் பின்னர் மேற்கு நோக்கிச் சென்று திருப்புன வாசலையடைய 45 மணித்துளியாயிற்று கோயிலைத் தொலைவில் காணும்போது காஞ்சிபுரம் கைலாயநாதர் விமானம் போலத்தோன்றினும் அருகில் வந்தபொழுது அதனினும் பெரிதாக மகாமேருவென்னவும் பெருமுடி கவித்தார்போலத் தோன்றியது. திருப்பணி நடை பெற்றுக் கொண்டுள்ளதும் தெரிந்தோம். சுற்றுமதில் பெரிதாய் அமைந்த பெருங்கோயில் ஊர்நடுவில் அமைந்து ஐந்து நிலை இராசகோபுரமும் கொண்டு அழகுறக்காட்சி தருகின்றது.

தலங்கள் பதினான்கும் இங்குள்ளதாக ஐதீகம் வைத்து பதினான்கு சிவலிங்கம் இக்கோயிலினுள் உள்ளதும் சித்தம் நீ நினை என்னொடும் சூளறும் வைகலும் என்னும் நம்பியாரூரர் போற்றும் திருத்தலமல்லவா என்று எண்ணியவாறே கோபுர வாயிலுக்குள் நுழைந்ததும் தெற்கில் தனிப்பீடமாகக் கொண்டுள்ள இடம் சென்று நின்று வணங்கி ஓதுவார் சுந்தரர் தேவாரம் பாடி முன் செல்ல தொடர்ந்து சென்று பழம்பதிநாதர் மகாலிங் கேஸ்வரரை வழிபட்டோம். மூலவர் தஞ்சைப் பெரு வுடையார் போல மகாலிங்கமாகவே தோன்ற விழி விரிய கரம் குவித்தும் வழிபட்டோம். மூன்று முழம் ஒரு சுற்று முப்பது முழம் ஒரு சுற்று என்பதும் (இலிங்க மூர்த்திக்கு மூன்று முழம் ஒரு சுற்று என்றால் ஆவுடை யாருக்குச் சுற்ற முப்பது முழம் ஆடை வேண்டும் எனத் தெரிந்தோம் குருக்கள் விபூதியளிக்கப் பெற்றணிந்து கொண்டு மகாமண்டபத்தில் வடக்கில் நடராசரும் தெற்கில் சோமாஸ்கந்தரும் நால்வர் சேக்கிழார் மூர்த்தங்

களை வழிபட்டு வெளிவந்து கருவறையின் வெளிச் சுற்றின் மேற்கில் இலிங்கோற்பவருக்குப் பதில் திருமாலும் அனுமனும் காட்சி தருவதும் குருந்த மரமும் நிருத்த கணபதி அகத்தியலிங்கம் (முனீஸ்வரன்) தட்சிணாமூர்த்தியும் கண்டு வழிபட்ட வண்ணமாக அம்பாள் திருமுன் சென்றோம் பெரியநாயகி செம்பட்டுடுத்திய கோலத்தின் அழகிய திருக்காட்சியருள துதி பாடி வணங்கினோம் குங்குமம் பெற்றணிந்து கொண்டு நேர் கிழக்கின் கோபுர வாயிலில் குடவரைக்காளி திருக்காட்சி காணச் சென்றோம் அச்சுறுத்தும் சக்தியாய் காளிதரிசனம் கண்ணாடியில் அருளக்கண்டோம். இக் காளியின் அருளாற்றலைப் போற்றி இங்குள்ள மக்கள் பெரும்பாலும் காளியப்பன், காளியம்மாள் என்று பெயர் சூட்டல் வழக்கம் என்பதும் அறிந்தோம். இரவு 7-00 மணியானமையால் அடுத்து ஆவுடையார் கோயில் வழிபட விரைந்தது உள்ளம்.

## "ஐந்தெழுத்து ஒலியுடன் - ஆவுடையார் கோயில்"

பேருந்து விரைந்தது மணிவாசகர் வரலாறும் திருப்பெருந்துறையின் பெருஞ்சிறப்பும் ஒலி பெருக்கியில் உரையாடியும் திருவாசகம் ஓதிக்கொண்டும் மகிழ்வுடன் வந்தோம். ஆவுடையார் கோயிலை உள்ளம் பெருவிழைவின் எதிர்நோக்கியதும் மனம் பேருந்தின் முன்னரே திருப்பெருந்துறை சென்றது ஓம் நமச்சிவாய, சிவாயா நம ஓம் என்று திருப்ப திருப்ப ஐந்தெழுத்தை அனைவரும் எழுச்சியுடன் பாடும் முழக்கம் எழுந்தது. கைத்தாளமிட்டுக் கொண்டும் கண்ணெல்லாம் கோபுர உச்சியை நோக்கியவாறே மும்மைசால் அன்புடன் வந்தோம். இரவு 8-15 மணிக்கு கோயில் வாயில்முன் பேருந்து நின்றது. அனைவரும் விரைந்து மண்டபம் முன்சென்று சேர்ந்து நின்றோம். மண்டபத்தின் மேல்

குரங்கும் உடும்பும் கீழ் நோக்கி பாயுந்தோற்றம் சிற்ப வடிவில் கண்டு சிக்கெனப்பிடிக்கும் - திறத்தில் நலங் கண்டு விரையும் ஆர்வமும் காணும் நலத்தைப் பற்று விடாக் காதலும் உணர்ந்து மகிழ்ந்தோம். எல்லோரும் ஒருங்கு திரண்டதும் ஒரே குரலாக சிவபுராணம் ஓதிக் கொண்டு கோயிலுள் புகுந்தோம்.

### "பெருந்துறையுள் - அருந்தமிழ் ஓதல்"

மாணிக்க வாசகர் திருமுன் நின்று தனியாகவும் சேர்ந்தும் திருவாசகத்தேனை ஓதியும் பாடியும் மகிழ்ந் தோம்-மணிவாசகர் அருளிய திருப்பாடல்களை அவர்தம் திருமுன் பாடியபோதும் ஓதும்போதும் உயிருணர்வின் உள்ளார்ந்த இன்ப அனுபவம் இழையோடத்தான் செய்தது, தமிழ் செய்தவப்பயன் அல்லவா திருவாசகம். இதனை யோதாமல் வாழும் தமிழ் மாந்தர் பேரின்பத் தையே இழந்து வறுமையுற்று வாடுவர் அன்றோ! என்றும் உள்ளம் ஏங்கியது.

*" இன்றெனக்கருளி இருள்கடிந்துள்ளத் எழுகின்ற ஞாயிறேபோன்று "*

*" நின்ற நின்தன்மை நினைப்பற நினைந்து "*

யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பதால் இதனை எழதலாகின்றது. வழிபட்ட கோயிலெல்லாம் அர்ச்சினை புரிந்தாற்போலவே மாணிக்க வாசகர்க்கும் சேக்கிழார் மன்ற அன்பர்சார்பில் அருச்சனை செய்யப் பெற்றது. தீபாராதனை ஒளியில் பொன்னாய் ஒளிவீசி மணிவாசகர் காட்சிதர மெய்மறந்து தலைதாழ்ந்து கும் பிட்டு வணங்கினோம். மணிவாசகர் திருமுன் நேராக திருவடிக்கோயில் அருள்மிகு யோகாம்பிகை சந்நிதி தோன்றக் கண்டோம். சிறிது நேரத்தில் அத்தயாம வழிபாடு மணிவாசகர் திருவடி யோகாம்பிகை ஆகிய இரண்டு சந்நிதியிலும் ஒரே நேரத்தில் தீபாராதனை

செய்ய இடை நின்று இரண்டையும் ஒருங்கே தரிசித்து வணங்கினோம் "இலங்குகின்ற நின் சேவடிகள் இரண்டும் வைப்பிடமின்றியே கலங்கினேன் கலங்காமலே வந்து காட்டினாய் கழுக்குன்றிலே" என்னும் திருவாசக அடிகள் நினைவிலெழ நாவருடியது விபூதி பெற்றணிந்து கோயில் உள்வலம் வந்து குருந்தமரம் கண்டு கொண்டே ஆவுடையார் ஆத்மநாதர் திருமுன் வந்தமர்ந்தோம். அனைவரும் ஒருமையாக சிவபுராணம் ஓதினோம். பரவசமான புறச்சூழலும் பதியை ஆத்மநாதரை விழையும் வுணர்வூக்கமுமாக தோன்றிய அந் நிலையில் ஆவுடையாரின் முன்மேடையில் ஆவியெழும்பும் வெண்சோறு விரவித் தீபாராதனையில் தெரியக் காணும் பேறு பெற்றோம்.

*அன்னம் பாலிக்குந் தில்லைச் சிற்றம் பலம்*
*பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை*
*என்னம் பாலிக்குமாறு கண் டின்புற*
*இன்னம் பாலிக்குமோ இப்பிற வியே*

(திருநாவுக்கரசர்)

என்றே நெஞ்ச மெலாம் நினைவாகியது! தரிசினம் முடிந்து வெளியே வருங்கால் அன்பர் ஆத்மநாதர்க்கு நிவேதித்த சோற்றை வாங்கியுண்ண விரும்பினர். அர்ச்சகர்களிடம் சில பட்டைச் சோற்றைக் காசு கொடுத்து வாங்கி அனைவரும் பகிர்ந்துண்டோம். கோயில் அர்ச்சகர் மற்றும் கூடியிருந்து மரியாதை செய்தனர். அவர் அனைவருக்கும் மன்றச் சார்பில் மற்ற கோயில்களில் செய்தமை போலவே அன்பளிப்புத் தந்து கலந்துரையாடி அன்புணர்வின் பிரியாவிடை பெற்றுப் பேருந்தில் விரைந்தோம்.

### "புதுக்கோட்டையுள் புவனேஸ்வரி வழிபாடு"

நள்ளிரவு 11-00 மணியளவில் புதுக்கோட்டை சேர்ந்து அருள்மிகு புவனேஸ்வரி திருக்கோயில் திருமண மண்டபத்தில் உணவுண்டு தங்கினோம். 5—8—95 காலை 6-00 மணிக்கு ஓதுவாமூர்த்தியுடன் புவனேஸ்வரி திருமுன் திருப்பள்ளி யெழுச்சிபாடி வழி பாடு செய்தோம். சேலம் கந்தாஸ்ரமம் ஸ்ரீ சத்குரு சாந்தானந்த சுவாமிகள் தலைவர் மு. கிருஷ்ணன் I.A.S. (ஓய்வு) அவர்கள்பால் புரியும் பேரருள் திறத்தை எண்ணியும் சுவாமிகளின் அருளாணையின் வண்ணம் அமைந்த ஸ்ரீ புவனேஸ்வரி திருக்கோயில் அழகும் கோயில் நிர்வகிக்கப் பெறும் திறனும் பிள்ளைகள் வேத அப்பியாசம் செய்யும் வித்தகமும் பெரிய வேள்விச் சாலையும், சாலையின் பின் முனிவர்தம் திருமேனிகள் வரிசையும் கண்டு வியந்து மகிழ்ந்தோம். காலை உணவு உண்டபின் அன்பர்களிடம் விடை கொண்டு புறப் பட்டோம்.

### "செந்தமிழ் நாட்டின் திருக்கோகர்ணம்"

காலை 8-30 மணிக்கு புதுக்கோட்டையில் திருக்கோ கர்ணம் என்னும் ஒரு பகுதி அங்கு கோகர்ணேசுவரர் குடைவரைக் கோயில் உள்ளது அங்கு சென்றோம். அருள்மிகு பிரகதாம்பாள் அருள்மிகு பகுளனேஸ்வரர் திருக்கோயில் முன் மண்டபம் இடமகன்ற வாயிலாக முன்தோன்றக் கண்டு மகிழ்ந்த வண்ணமாக கோயினுட் புகுந்தோம். பகுளனேஸ்வரர் சந்நிதி எதிர் 63 நாயன் மார்முன் காட்சி கொடுத்த நாயனுர் சிற்ப வடிவில் அழகு மிளிர் தோற்றம் தரக்கண்டு வணங்கினோம். குடை வரையில் ஏழு கன்னியர் வரிசைக் காட்சியும் சதுரமான ஆவுடையாரில் இலிங்க மூர்த்தியாய் குடைவரைக் கோயினுள் கோகர்ணேசர் திருக்காட்சி கண்டு வழிபட்டு

வணங்கி விபூதி பெற்று அணிந்தோம். மலை இடைக் குளமாக நீர்ச்சுனையும் கண்டு மேற்சென்று விநாயகர் பாறையின் புடைச்சிற்ப வடிவில் தோன்றும் கங்காதரர் மலைமேல் முருகர் உருத்திராக்கலிங்கேசுரர் அன்ன பூரணி துர்க்கா-மகாலட்சுமி-சரசுவதி திருமூர்த்தங்களை வணங்கி வலம் வந்து முன் பிர்ம்மாசுரகனேஸ்வரர் நால்வர் (நாயன்மார்) திருமுன் வணங்கிக் கொண்டு மலை உச்சித்திருச்சுனையும் பார்த்துக் கொண்டே தலமரம் மகிழமரத்தை வணங்கியவாறே மேல் தளத்தின் கீழ்ப் பகுதியின் வண்ண ஓவியமாக-பன்னிருராசிகளும் ராசி நாதனும் காட்சிதர மகிழ்ந்து கண்டோம். காலம்கருதி விரைந்து புறப்பட்டு - புதுக்கோட்டை திலகவதியார் ஆதீனம் சாயிமாதா சிவபிருந்தா தேவியைக் கண்டு ஆசிபெற்றுக் கொண்டோம். திரைப்பட நடிகர் ஜெமினி கணேசனின் பூர்வீக இல்லம் அது என்பதறிந்தோம். இளமகளிர் இசை நடனக்கல்வி பயிலவும் அங்கு தங்கி யுள்ளனர் என்பதும் தெரிந்து கொண்டு புறப்பட் டோம். பேருந்து வெண்ணித் திருக்கோயிலை எண்ணி விரைந்து சென்றது.

### "புன்னைநல்லூர் மாரியம்மன்"

பேருந்து தஞ்சாவூர்-திருவாரூர் சாலையில் செல்லத் தொடங்கியதும் வழியில் புன்னை நல்லூர் முத்து மாரி யம்மன் கோயில் உள்ளது என்றும் தரிசிக்க வேண்டும் என்றும் அன்பர் விருப்பம் எழவே அக்கோயில் அருகே பேருந்தும் சென்று நின்றது. அன்பர்கள் விரைந்து இறங் கிச்சென்றனர்.

கோபுரமும் கோயிலும் புதுப் பொலிவுடன் திகழ் கின்றதும் வண்ண ஓவியங்களின் வளமும் கண்டு கொண்டே வலம் வந்தோம். மேற்பாற் சுவற்றில் எழுதி யுள்ளதும் பாடகச்சேரி - இராமலிங்க சுவாமிகள் பைரவ

உபாசகர், முருகன் கோயில் நிறுவினர் என்பதும் சதா. சிவப்பிரமேந்திரர் இங்கு தங்கியிருந்து அம்மன் சிரசிற்கு புற்று மண்ணைப் பிசைந்து உடல் உருவம் அமைத்துப் பிரதிட்டை செய்தார் என்பதும் தெரிந்து முத்துமாரியின் திருமுன் வந்து வணங்கி வழிபட்டோம். குங்குமம் பெற்றுக்கொண்டு புறப்பட்டோம்.

## " திருவெண்ணி "

காலை 11-55 மணிக்கு திருவெண்ணி சென்றோம். கரிகாற்சோழன் வெண்ணிப் பரந்தலையில் போரிட்டு வென்றான் என்னும் பழம் பெரும் செய்தியின் அடையாளம்போல அப்பகுதி வரண்ட நிலத்தின் பரற்கற்கள் முள்வேலி மரங்கள் மண்டிய பாலை நிலமாகவே தோன்றியது. சோழ வளநாட்டின் மாறுபட்டதாகவும் தோன்றியது.

அப்பகுதி தஞ்சை திருவாரூர் சாலையின் இடப்பால் கோயில் வெண்ணி திறுத்தத்தில் இருந்து சிறிது தூரம் கிளைச்சாலையில் சென்று கோயிலை அடைந்தோம். கோயில் முன் குளம். சூரிய தீர்த்தம். குட்டை போல் காட்சி தருகின்றது. மூன்று நிலை இராசகோபுரம் கண்டு கொண்டே உள் புகுந்து ஓதுவார் தலத்திருப்பதிகம் பாடிச்செல்ல பின்தொடர்ந்தோம் வெண்ணிக்கரும்பீசர் திருமுன் (கிழக்கு நோக்கிய சந்நிதி) வடக்கு நோக்கி நின்றோம். சௌந்திரநாயகி அழகிய திருக்கோலத்தின் நான்கு திருக்கரங்களுடன் அருளார்ந்த காட்சிதர நேர் கண்டோம் ( அம்பிகை தெற்கு நோக்கிய சந்நிதி ) இங்ஙனம் நாங்கள் நின்ற இடத்திலேயே கரும்பீசரையும் சௌந்தரநாயகி அம்மையையும் வழிபடும் நெறியருளிய இறையருளை யெண்ணி வியந்தோம்.

தொண்டிலங்கும் அடியவர்க்கோர் நெறியினாருந்
தூநீறு துதைந்திலங்கு மார்பினாரும்

*புண்டரீகத்தயனெடுமால் காணா வண்ணம்*
*பொங்குதழற் பிழம்பாய புராணனாரும்*
*வண்டமரும் மலர்க்கொன்றை மாலையாரும்*
*வானவர்க்காய் நஞ்சுண்ட மைந்தனாரும்*
*விண்டவர்தம் புரமூன்றும் எரிசெய்தாரும்*
*வெண்ணிய மார்ந்துரைகின்ற விகிர்தனாரே*

என்னும் தாண்டக வேந்தர் தமிழருள் காட்சியை யுணர்ந்து மகிழ்ந்தோம். வெண்ணிக்கரும்பீசர் கரும்பின் கட்டு போன்று விளங்கும் இறை திருக்காட்சியை வழி பட்டு வணங்கினோம். குருக்கள் திருநீறு அளித்தவாறே தலச்சிறப்பைத் தெரிவித்தார் யுகம்பல கண்ட கோயில் இது மிகு பழமையானது

*வெண்ணித் தொல்நகர் மேய வெண் திங்களார்*
*கண்ணித் தொத்த சடையர் கபாலியார்*
*எண்ணித் தம்மை நினைந்திருந்தேனுக்கு*
*அண்ணித் திட்டு அமுதூறு மென் நாவுக்கே !*

என்கிறார் அப்பர்.

## " வெண்ணிக் கரும்பீசர் "

முசுகுந்த சக்ரவர்த்தி சோழரின் மூதாதை – கந்த புராணத்தில் முருகன் – தெய்வயானை திருமணத்திற்கு வந்த பூவுலகமன்னர். தியாகராசரை பூவுலகம் எழுந் தருளச் செய்தவர். குரங்குமுக மன்னன் (ஆதிமுதல் மனிதன்–குரங்கு முகனே என்பது டார்வின் சித்தாந்தம்) இம்மன்னர் காலத்தில் கரும்பும். நந்தியாவர்த்தக் காடு களுமாய் இருந்த இடத்தில் இரண்டு முனிவர்கள் கரும் பீசரா ? வெண்ணியீசரா ? என்று கருத்து வேறுபாடு கொண்டு கூச்சலிட முசுகுந்தன் இருவரையும் அமைதி யுறச் செய்து இறைவன் இருப்பது தெரிந்து அவர்க்குக் கோயில் எடுப்பித்தான் என்றார் கேட்டதும் கரும்பு கட்டுபோல் தோன்றும் சிவலிங்க மூர்த்தியும் அழகிய

நாயகியாயத் தோன்றும் சௌந்தர நாயகியும் "கரும் பினில் கட்டி போல்வார்" என்னும் செந்தமிழ் இனிப்பு தோன்றக் கண்டோம் - சதுர ஆவுடையாரின் கரும்பு கட்டு போன்ற வரிவரியாய்த் தோன்றும் இலிங்கமூர்த்தி கரும்பீசர் என்னும் நந்தியா வர்த்தம்போலவும் தோன் றுவதால் வெண்ணி (மெண்மலர்) நந்தியா வர்த்தம் - வெண்ணி என்றும் ஆக வெண்ணிக் கரும்பீசர் என்றும் பெயர் அமைந்தன என்பதும் தெரிந்தவுடன் காரணம் அறிய விரும்பிக்கண்டால் ஏற்படும் தெளிவு உணர்வின் பெருமகிழ்வு இன்னது போலும் என்பதும் தெரிந்து மகிழ்ந்தோம் அம்பிகையை வழிபட்டு வணங்கினோம்.

**" திருமுறையைப் போற்றும் நன்முறை "**

நடராசர் நால்வர் திருமுன் வணங்கி நால்வருக்குப் பக்கமாக காஞ்சி - காமகோடி பீடம்; ஸ்ரீ சந்திரசேக ரேந்திர சுவாமிகளின் திருவுருவம் வண்ணவடிவில் இருப் பதும் கண்டு வணங்கினோம். திருமுறைகளைப் பெரிதும் போற்றிப் பாராட்டிய பெருமான் இவர். ஆயினும் நால் வருடன் ஐந்தாமவராக அமைத்தல் முறையா? என்று வினாவெழுந்தது மற்றும் கிருபானந்த வாரியார் சுவாமி களையும் இதுபோன்று 64-வது நாயன்மார் என்று சொல்லும் முறையும் முறையன்று திருத்தொண்டர் திருத் தொகையில் "அப்பாலும் அடிசார்ந்தார்" என்னும் தொகையடியாரில் இப்பெரியோர்களும் வைத்துத் துதிக் கப்பெறவேண்டியவர்களே! அல்லாமல் தனியடியார் களாகச் சேர்த்தால் அறுபான்மும்மை நாயன்மார் என்னும் அமைப்பைத் தளர்த்திப்பின் நீக்கியவர்களா கவே ஆவோம் என்னும் கருத்தே ஒருமனதாக எழுந்தது சிந்தனையோட்டத்துடன் நடையோட்டமாக வெளியே வந்து அழகிய கருவறை விமானம் அதன் மேல் வடிவார்ந்த கலசம். கதிரவன் உச்சிப்போதின்

ஒளிவிரித்தளிக்கும் உயரழகும் வணங்கி வந்தோம். பேருந்தில் அமர்ந்ததும் சூரியனார் கோயில் நோக்கி விரைந்தது வண்டி.

### " சூரியனார் கோயில் - குருவருளே "

கும்பகோணம் ஆடுதுறை வழியாக சூரியனார்கோயில் ஸ்ரீ சிவாக்கிரயோகிகள் ஆதீனத் திருமடத்திற்குப் பகல் 2-15 மணிக்குச் சேர்ந்தோம். திருமடத்து அலுவலர்கள் வரவேற்க உள்ளே சென்று மடாதிபதி கந்தபரம்பரை ஸ்ரீ சிவாக்கிரயோகிகள் ஆதீனகர்த்தரை வணங்கினோம். சுவாமிகள் இளநகை தவழும் இன்னருள் புரிந்தவாறே ஆலய வழிபாட்டின் கூடிய எம்நெஞ்சக் குறிப்பினைத் தெரியுமாறு போல எங்கள் பயணத்தின் இனியவழி பாடெலாம் குறித்துக் குறித்து வினவினார். ஆலய வழிபாட்டின் பெற்ற எம் அன்புணர்வைக் கிளர்ச்சியுறச் செய்தார். சென்று வந்த தலமெலாம் மீண்டும் எம்மனவுணர்வு சென்றது. மறுமலர்ச்சியுற்ற மகிழ்விலாழ்ந்தோம், உணவு நேரம் கடந்ததால் திரு மடத்து அலுவலர்கள் உணவளிக்கக் குறிப்பிட்டனர். சுவாமிகள் உணவருந்தப் பணித்தார்கள். திருமடத்தின் உட்சுற்றுத் தாழ்வாரத்தின் இரண்டு வரிசையாய் அமர்ந்து ஆறுசுவையுணவை அழகுற உண்டோம் சிறிது நேர ஓய்விற்குப்பின் சுவாமிகளை வணங்கி விபூதி பெற்றணிந்து கொண்டு விடை பெற்று சூரியனார் கோயிலுக்குப் புறப்பட்டோம்.

### " ஒன்பது கோளும் உறைதிருக் கோயில் "

*ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி*
*சனி பாம்பிரண்டுமுடனே !*
*ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியார்*
*அவர்க்கு மிகவே !*

என்னும் செந்தமிழ் திருப்பாடலின் அடிகள் நினைவெழ வாயினில் ஒலித்தவண்ணம் விரைந்தோம். கோயில் முன் சாதுக்கள் பலர் ஒருங்குகூடி இடுவோர்த் தேர்ந் தாங்கு இருந்தனர். வணங்கியவாறே அனைவரும் ஒருங்கே கோபுர வாயில் உட்புகுந்தோம். உள்ளே சூரியனார் கோயில் நடுநாயகமாகவும் சுற்றிலும் மற்ற கோள்களின் திருக்கோயில் சந்நிதிகள் ஒவ்வொன்றும் வெவ்வேறு திசை நோக்கியவாறு அமைந்து விண்ணி யங்கும் வண்ணத்தை மண்ணில் வடிவமைத்த வாறென்று வியக்கும்படி தோன்றின.

சூரியனார் கோயில் முகப்பின் மேல் ஏழு குதிரை தாவியோடுந் தேர்த்தட்டில் சூரியன் அமர்ந்த வண்ணம் அழகிய பதுமை வடிவும் இருபக்கமும் உலக உருண்டை மேல் சிங்கம் முன்னிரண்டு கால்களையும் பதித்து வாய் பிளந்தவாறு தோன்றும் பதுமைகளும் வண்ணவுருவாய் வடிவு காட்டி மகிழ்வித்தன. உலகின் மேலாதிக்கம் இக் கோள்களின் (சிங்கத்தின்) கையில்தான் உள்ளது என்னும் குறிப்புணர்ச்சியும் தெரிந்தது.

கோள்வினை தீர்த்த விநாயகரை வழிபட்டு சூரியன் திருமுன் வந்து வழிபட்டோம். சாயாதேவி வலமாகவும் உஷாதேவி இடமாகவும் நடுநாயகனாக சூரியன் தோற்றம் நெஞ்சம் நிறைந்த காட்சியாகத் தோன்றியது. அர்ச்சகர் சேக்கிழார் மன்ற அன்பர்கள் பெயரில் அருச்சனை புரிந்தார். தீபாராதனை ஒளியில் உலகப் பேரொளியாகிய சூரியதேவனை வழிபாடாற்றி வணங் கினோம் உயிர்கட்கு பராசக்தி திருவருளையப் பரிந் தருளும் காட்சியும் இதுபோன்றது தானோ ? என்பதும் எண்ணமாக எழுந்தது. தொடர்ந்து வந்த தீபாராதனை ஒளியில் சூரியன் எதிர் நிலையாக குரு வியாழன் பொன்னாடை புனைந்து திருக்காட்சியருளுவதும் கண்டு

வணங்கி மகிழ்ந்தோம். குருவிற்குப் - பொன் என்றும் பெயருண்டு. பொன் குரு பொன்னுடை புனைந்து எமக்கு காட்சியருளும் எம் புண்ணியப் பேற்றையும் போற்றிக் கொண்டாடினோம். விபூதி பெற்றணிந்து வெளியே வந்ததும் அன்பர்கள் தனித்தனியாக சோயிலை உள் வலமாக சுற்றத் தொடங்கினர். காலத்தின் விரைவை யுணர்த்தினோம் கேட்டவர்கள் சுற்றுவதை விரைவாகச் சுற்ற நடைவேகம் கொண்டனரே அன்றி நடையை நிறுத்தவில்லை. 9 கோள்கள் அல்லவா 9 சுற்று வலம் சுற்றவேண்டும் என்று சிலர் நகையாடி யுரைத்ததும் நின்று கொண்டு இருந்தவர்களும் கலந்து கொண்டு விரைந்து சுற்றத் தொடங்கினர். மகளிர் சிலர் வயது மூப்டையும் கருதாது விரைர்து சுற்றியது கண்டு நகைப் புடன் வருத்தமும் தோன்றியது. சில மணித்துளிகளில் 9 சுற்றும் சுற்றி முடித்ததும் பலி பீடத்தின் முன் நிலந் தோயவிழுந்து வணங்கிப் புறப்பட்டோம்.

## "திருமங்கலக்குடி"

தமிழகத்தின் எல்லாத்திருக்கோயில்களிலும் மக்கள் இந்த ஒன்பான் கோள்களையே பயபக்தியுடன் வலஞ் சுற்றி வருவதில் காட்டும் உணர்வில் சிறிது ஆகினும் மூலமூர்த்தியாகிய பேரொளியை சிவலிங்க மூர்த்தியை போற்றி வலம் வருவதற்குக் கொள்வாராயின் எல்லா நலமும் எளிதில் வாய்க்கும் இல்லையா ? அரன் கோயில் எல்லாம் கோள்களை வைத்து கோளாறுவைத்தவர் யார்? எந்த ஆகமம் இதை வகுத்தது ? என்றெல்லாம் சிந்தனை விரிந்தது.

வேல்படுத்திடு கண்ணினன் மேரு வில்லாகவே
வாளரக்கர்புர மெரித்தான் மங்கலக்குடி
ஆளும் ஆதிப்பிரான் அடிகளடைந்தேத்தவே
கோளும் நாளவை யேயறுங் குற்றமில்லார்களே!

என்னும் திருஞானசம்பந்தரின் திருமங்கலக்குடிப் பதிகப் பாடல் நினைவிலெழ அடுத்து நாம் திருமங்கலக்குடி வழிபாடு செய்கின்றோம் என்னும் நிகழ்ச்சி பெருமகிழ் வாயது. சூரியன் முதலிய ஒன்பது கோள்களும் வழிபட்டு தத்தம் குற்றம், நீங்கப்பெற்ற திருத்தலம்-திருமங்கலக்குடி இறைவன் அ/மி மங்கல நாயகியுடனாய், அ/மி பிராணவரதேஸ்வரர் இவரை வழிபட்ட பின்னரே சூரியனார் கோயில் சென்று வழிபடவேண்டும் ஆனால் எங்களுக்கோ சூரியனார் கோயில் வழிபட்ட பின்னர் திருமங்கலக்குடி செல்லும் வாய்ப்பாக அமைந்தது. உலகியலின் வெள்ளம் போலும் இதுவும் என்றும் எண்ணினோம். எண்ணிய வேகத்தோடு மாலை 5-00 மணிக்கு திருக்கோயில் கோபுரவாயில் முன் சென்று நின்றது பேருந்து.

ஐந்து நிலை இராசகோபுரம் முன்னே திருக்குளம் வணங்கியுட் சென்றோம். மங்கல விநாயகர் திருமுன் நின்று ஆடலரசு அவர்கள்

> *தங்கலப்பிய தக்கன் பெருவேள்வி*
> *அங்க லக்கழித் தாரருள் செய்தவன்*
> *கொங்கலர்குழல் கொம்பனை யாளொடு*
> *மங்கலக்குடி மேய மணாளனே.* (அப்பர்)

என்று தேவாரத்தை ஓதி முன் செல்ல உடன் நினைந்தும் ஓதியும் கோயிலை வலம் வந்து திருமுன் சென்றோம். குருக்கள் அர்ச்சனை புரிந்து தீபாரதனை செய்தார். ஒளியில் வட்டமான ஆவுடையாரின் நீண்டுயர் சோதியான இலிங்கமூர்த்தி திருமுடிமேல் செம்பருத்திப் பூ தோன்ற மங்கலக்குடி மாதேவனைக் காண வழிபாடாற்றத் திருவருள் வாய்த்ததே பெரும் பேறெனத்தோன்ற திருக்காட்சி கண்டு வழிபட்டோம். விபூதி பெற்றணிந்துகொண்டே தல விபரத்தைக் கேட்டோம்.

உடல் வியாதியுடையோர் இங்கு வந்து கார்த்திகைமுதல் ஞாயிறு தொடங்கி 11 ஞாயிற்றுக்கிழமைகள் இங்குள்ள வெள்ளெருக்கு இலையில் தயிர் சாதம் இறைவற்கு நிவேதனம் செய்து உண்டு வந்தால் வியாதி நீங்கப்பெறு வர் என்பது நடைமுறை என்பதைத் தெரிவித்த அர்ச்சகர் இத்தலம் பஞ்சமங்கலத்திருத்தலம் 1) மங்கல விநாயகர் 2) மங்கல தீர்த்தம் 3) மங்கலக்குடி (தலம்) 4) மங்களாம்பிகை 5) மங்கல விமானம் ஆக ஐந்து மங்கலத்தலம் என்று திருப்பெயர் பெற்றது என்று சொல்லிக் கொண்டே அம்பிகையின் திருமுன் அழைத் துச்சென்று அருச்சித்து தீபாராதனை செய்வித்து குங் குமம் அளித்தார்.

**"மாங்கல்யம் தந்த மங்களாம்பிகை"**

*பிராணனைத் தந்த பிராணவரதேசுரர்*
*மாங்கல்யம் தந்த மங்களாம்பிகை!*

இன்றும் மகளிர் மாங்கல்ய உறுதி பெறவும் திருமணங் கூடவும் அம்பிகையை நாளும் வழிபட்டுப் பெறுகின்ற அளவிலாப் பயன் கண் கூடானது; மகளிர் எல்லோரும் அம்பிகை திருவடியில் அர்ச்சித்த மஞ்சள் கயிறு வாங் கிச்சென்று அணிந்து கொள்கின்றனர் என்றார். இது கேட்டதும் வழிபாட்டில் உடன் வந்த மகளிரெல்லாரும் காசு கொடுத்து மஞ்சள் கயிறுகளை வணங்கிப் பெற்றுக் கொண்டனர்.

கோயிலினுள் இரண்டு நடராசர். ஒருவர் ஆனித் திருமஞ்சனத்திலும் மற்றவர் மார்கழித் திருவாதிரை யிலும் அபிடேகம் கொண்டு காட்சியருளுவர் என்பதும் திருச்சுற்றின் கோஷ்டத்தில் இரண்டு தட்சணாமூர்த்தி திருமேனிக் காட்சியும் இத்திருக் கோயிலுள் இரட்டைச் சிறப்பாக உள்ளன. உட் சுற்றில் 11 சிவலிங்கம் வரிசை யாகவுள்ளன. இவை, கார்த்திகை முதல் 11 ஞாயிறு

வழிபாட்டின் சிறப்புப்போலும். இத்தலவிருட்சம் எருக்கமரம். அதுவும் வெள்ளெருக்கம் மரம். இங்கு அழகிய தோற்றமுடன் தோன்றியுள்ள அழகும், இம்மாலை வேளையில்

*செல்வம் மல்கு திருமங்கலக்குடி*
*செல்வம் மல்கு சிவநியமத்தராய்ச்*
*செல்வம் மல்கு செழுமறையோர் தொழ*
*செல்வன் தேவியோடும் திகழ்கோயிலே (அப்பர்)*

வழிபாடு செய்யும் பேறும் வாய்த்ததே-என்பதே பெரு மகிழ்வாகக் கொடிமரத்தின் முன் விழுந்து வணங்கினோம். மாலை 5-40 மணிக்கு புறப்பட்டபோது அடுத்ததலம் என்ன என்று சிலர் வழக்கம் போல வினவினர். திரைலோக்கி - என்றதும் பெயரே புதுமையானதாய் வியப்பைத் தருகின்றதே என்று முக மலர்ந்தனர். வயல்வெளிகளுடே செல்லும் சாலையில் பேருந்து சென்று கொண்டிருக்க இரண்டு பக்கமும் காவிரி நாட்டின்சோலை சூழ்வயல் வெளிகளின் கவினார்ந்த தோற்றம் அம்மாலை வேளையில் பசும்பொன்னாய் மின்னியது. திரைலோக்கியை அகம் நோக்க கண்களெலாம் சோழவள நாட்டின் வள வயல்களை நோக்கின. இவ் வழிபாட்டில் வயலூர்க்கு அடுத்தாற்போல இயற்கை எழிலுடன் பொழில் சூழ்ந்த பெருவயல் இத்திருக்காட்சியெனப் போற்றிக் கொண்டு சிவபுராணம் ஓதிச் சென்றோம். மாலை 6-10 மணிக்குத் திரைலோக்கி சேர்ந்தோம்

கோயிலுக்கு முன்னரே சந்நிதி வீதியின் முதன் முனையில் ஸ்ரீ காசி மடத்துக் கிளைமடம் உள்ளது. அங்கிருந்த அன்பர்கள் முன்வந்து எங்கள் அனைவரையும் வரவேற்று உபசரித்துத் திருமடத்துள் அழைத்துச் சென்று வயிரவர் சந்நிதியில் வைத்து தீபாராதனை செய்வித்துப் போற்றுவித்தனர். எங்களைக் கண்டதும் அன்

பர் தம் முகமலர்ச்சியும் அழைத்துச் சென்று தரிசனம் செய்வித்த பண்பும் எங்கள் உள்ளமெலாம் கனியாகச் செய்ய ஒருவர்க் கொருவர் உபசரிப்பின் உரையாட லின்றியே உணர்வொருமையான் அன்பின் பேரின் பமே தலைப்பட்டனர். இரண்டு கூட்டத்தினரும் (வந்தவர் + வரவேற்றவர்) ஒரு கூட்டத்தினராய்த் திரை லோக்கிய சுந்தரனை வழிபடச் சென்றோம். இத் திருக் கூட்டம் அந்த ஊரிலிருந்து நாங்கள் புறப்படும் வரை யும் தொடர்ந்தது சிறப்பாகும்.

## "திரைலோக்கிய சுந்தரன்"

பழமை மிகு கோயில். சுண்ணப்பூச்சு கலைந்து உட் செங்கற்கள் வெளிப்படத் தோன்றிய சுவர்கள் முன் னிற்பனவாக இருப்பினும் உள்ளே பழமைமிகு கலை யழகு நிலைபெறு காட்சி தந்தது. ஓதுவார் திரு. ஆடலரசு திருத்தொண்டத்தொகை பாடிச் செல்லக் கேட்ட வண்ணமாக உட் புகுந்தோம். மின்விளக்கு மின்மினிப் பூச்சியைக் காட்டி மினுமினுத்தன. உள்ளே எண்ணெய் தீபங்கள் சூழொளி விளக்காய், சுந்தரனைக் குறிப்பா லுணரக்காட்டி ஒளிர்ந்தன. எல்லோருமாய்த் தொடர்ந்து சென்று திருமுன் நின்றோம்.

*நையாத மனத்தினனை நைவிப்பான் இத்தெருவே*
*ஐயா நீ உலாப் போந்த அன்று முதல் இன்று வரை*
*கையாரத் தொழுதருவி கண்ணாரச் சொரிந்தாலும்*
*செய்யாயோ அருள் கோடைத் திரைலோக்கிய*
*சுந்தரனே!*

என்ற திருப்பாடலை ஓதுவார் உணர்வொன்றப் பாடினார். எல்லோருடைய வுள்ளமும் நையும் உள்ளமாயிற்று என்பதை அப்போது தோன்றிய மிகு அமைதியே மேலோங்கி யுணர்த்தியது.

கருவூர்த்தேவர்-பெருஞ்சித்தர் 9 ஆம் திருமுறையுள் பத்துத் திருவிசைப்பாப் பதிகங்கள் பாடியுள்ள பெருமான். இவர்தம் இசைப்பா பெற்ற திரைலோக்கி என்னும் இத்தலம் முதலாம் இராசராசன் பட்டத்து அரசியருள் ஒருவர் ஆகிய திரைலோக்கிய மாதேவி பெயரால் அமைந்தது இத்தலத்து இறைவன் திரைலோக்கிய சுந்தரன் அகிலாண்டேசுவரியம்மையுடனாய் அருள் பாலிக்கின்றான்.

கோடைத்திரைலோக்கிய சுந்தரன் என்பது திரைலோக்கித் தலத்தின் தெற்கில் கோட்டூர் என்னும் ஊர் உள்ளது எனவே கோடைத் திரைலோக்கி என்றும் சிவலிங்கத் திருமேனி மிக்கழகாய் (சுந்தரம்) விளங்குதலின் திரைலோக்கிய சுந்தரனே! என்றும் கருவூரர் விளிக்கும் குறிப்பும் தெரிந்து உணர்ந்தோம்.

**"அணைத்தெழுந்த நாயகர்"**

அம்பிகையின் அழகார்ந்த அருள் திருமுன் கற்பூர ஆரத்தி செய்யும் போது கண் பெற்ற பயனை முழுதும் கண்டோம். மகிழ்ந்த உள்ளம் கரங்களைத் தாமே சிர மேற் கூப்ப வைத்தது. உடன் கற்பூர தீப ஒளியோடு வந்த குருக்கள் அர்த்த மண்டபத்தின் குரு பகவானுக்கு விடைப்பாகராய் சிவபெருமான் காட்சி தரும் கோலமும் நேர் எதிரில் அம்மையின் கொடியிடையில் கரந்தழுவ ஆலிங்கன மூர்த்தியாய் அணைத்தெழுந்த நாதராய்த் தோன்றும் திருக்காட்சியும் காட்ட இப்பிறவியில் 'கண்டறியாதன கண்டோம்' என்றே போற்றித்தொழுதோம். கயிலாய நாதரை வெள்ளி வெற்பின் மேல் மரகதக் கொடியுடன் விளங்கும் தெள்ளு பேரொளிப் பவள வெற்பெனக் கண்ட திருநாவுக்கரசரின் திருவையாற்றுத் திருக்காட்சியே திரைலோக்கிய சுந்தரர் எமக்கருளினாரோ என்றே பெருமிதமுற்றது உள்ளம். இத்திருக்

காட்சிகள் அற்புதக் கலைகளாய் தெய்வீக அருள் நிலையை வழங்கும் தமிழகத்தின் தனிக்கலை யொழுக்சப் பண்பாட்டின் தனியுருவமாய்த் தோன்றின. பெண்ணின் நல்லாளோடும் பெருந்தகை தழுவும் திறமும் பூங்கொடி போன்று அம்பிகை ஒசிர்து நிற்கும் மென்மை தோய் நளினமும் மிளிரும் ஆலிங்கன மூர்த்தியின் அருளார்ந்த பேரழகும், எதிரில் விடைப்பகராய் நிமிர் நடை நோக்கும் இடபத்தின் மேல் அம்பிகையுடன் அபயகரந் தூக்கி முறுவல் முகிழ்க்க கடைக்கண் விரும்பி பக்கமாகக் கும் பிட்டு நிற்கும் குரு பகவானுக்கு அருள்புரி காட்சியும் இறைவன் அழகார்ந்த பேரருளும் எத்தனை முறை உற்று நோக்கினும் உணர்வின் பரப்பு மேலும் ஏதோ ஒன்று உணரவேண்டும் என்றே ஏங்க வைக்கின்றது. இத்திருக் காட்சி கயிலைக் காட்சியே! இத்திறனை உலகம் முழு வதும் திரண்டு வந்து கண்டுணரும் நாளை அக்கடவுளே அருள வேண்டும் என்றே போற்றினேம். அவனரு ளாலேதான் அவன் தாளை வணங்கிப் போற்றுதல் இயலும் அல்லவா? எல்லோருக்கும் இத்திருக் காட்சி வாய்க்கவில்லையே?

## "கயிலாயநாதர் திருக்கோயில்"

மகிழ்வுடன் வணங்கி விபூதியும் குங்குமமும் பெற் றணிந்து கொண்டு ஐந்தெழுத்தும் பாசுரமும் குழுவாகப் பாடிக்கொண்டு சந்நிதி வீதியில் சென்றேம். பேருந்து பின் தொடர்ந்தது. வீதியில் ஊர் மக்கள் ஆடவரும் பெண்டிரும் பிள்ளைகளுமாக வியந்தும் மகிழ்ந்தும் நின்றனர். மாலை மயங்கிமையிருள் கூடிக்கொண்டே வந்தது. வீதியின் கீழ்த்திசை முடிந்து வயல்கள் தொடங் கும் வயல் வெளியில் புதுமை வண்ணமும் பழமைக் கோலமுமாய் தோன்றியது கயிலாயநாதர் திருக்கோயில் சோழர் காலத்தொன்மை வாய்ந்த இக் கோயில் திருப் பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தின் அதிபர் சுவாமிகள் அரு

ளாணையின் படி திருப்பணி செய்யப்பெற்று சமீபத்தில் குடமுழுக்கும் கொண்டு புதுவண்ணப் பொலிவுடன் திகழ்வதையறிந்த போது பெருமகிழ் வெய்தினோம். மகிழ்வுடன் ஒன்றிரண்டு படியேறி கோயிலுட் சென்றோம். அர்த்த மண்டபத்துடன் கூடிய கருவரை மட்டுமே கொண்டே சிறிய கோயிலே யாயினும் சிவலிங்க மூர்த்தி பெரிய ஆகிருதியுடன் பொலிவாகத் தோன்றும் அழகும் முன் மண்டபத்தில் உமையம்மை எழிலார்ந்த முறுவல் பூத்தொளிரும் உறுபேரருளும், உட்சுற்றில் முருகன், சண்டீசர், பைரவர், சூரியன், தோன்றும் திருப்படிவத் திருநிலைகளும் கண்டு திருக்கயிலை வாழ்வையே முன் தோன்றக் காட்டும் திருக்கோயில் அது என்பதை சிறிது நேரத்திலேயே தெரிந்தோம். தேவாரம் பாடி அருச்சனை முடிந்து தீபாராதனை ஒளியில் திருவருள் காட்சி உணர் வுருவாய்த் தோன்ற வழிபட்டோம். விபூதி பெற்றணிந்து அன்பர்களிடம் பிரியாவிடை பெற்றுக்கொண்டு திருப் பனந்தாளை நோக்கிப் புறப்பட்டோம்.

இத்திருக் கோயிலைப் பற்றிய கல்வெட்டு ஒன்றில் இராசேந்திர சோழ தேவர் கங்கை கொண்டு எழுந்தருளு கின்ற காலத்து திருவடி தொழுது என்று குறிக்கப் பெற் றுள்ளதால் கங்கை கொண்ட சோழன் முதலாம் இராசேந்திரன் கங்கை நீரைக் கொண்டு வருகையில் இங்கு வந்து இறைவனை வழிபட்டான் என்பது கொள் ளக் கிடக்கின்றது. இச்சிறப்பால் இதுவே கருவூரரால் திருவிசைப் பா பாடப் பெற்றதாதல் வேண்டும் என்ற கருத்து ஒன்றுண்டு என்பதும் மற்று ஆலிங்கன மூர்த்தி அணைத்தெழுந்த நாதரும் இடபாருடராய்க் காட்சி தரும் பெருமான் உலாப் போகும் காட்சியும் உடைய தால் முதல் திருக்கோயிலே திரைலோக்கிய சுந்தரர் திருக் கோயில், இது கைலாய நாதர் இராசேந்திரன் வழிபட்ட

திருக்கோயில் என்றே ஆய்வுரை வழங்கி இறையழகின் தோய்வருளூற்று உரையாடி மகிழ்வுடன் வந்தோம்.

**" திருப்பனந்தாள் - காசிமடம் "**

இரவு 8-30 மணியளவில் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் திருவாயில் முன் நின்றது பேருந்து. ஆதிகுமர குரு சுவாமிகள் அமைத்த திருத் தொண்டின் பொலிவும் திருவும் பெற்று விளங்கும் உயர் திருமடம் அதனைக் கண்டதும்

*" ஆயும் பழைய அடியாருடன் கூட்டித்*
*தோயும் பரபோகந் துய்ப்பித்துச்-சேய*
*கடியேற்கும் பூங்கமலக் கால் காட்டி ஆட் கொண்டு*
*அடியேற்கு முன்னின்றருள்*

என்னும் குமரகுருபரரின் கந்தர் செந்தமிழ்க் கவித் தொடர் நினைவிலெழுந்தது. இத்தொடர் திருவருள் எம்மை தலங்கள் தொறும் ஆயும் பழைய அன்பருடன் கூட்டி வழிபாட்டின் பேரின்பந்துய்ப்பித்து செம்பொரு ளாம் திருவடிப் பேறாக குருவருட்குப் பாத்திரராக்கு கின்றதே என்னுமாறு ஸ்ரீ காசிமடம் கயிலைமாமுனிவர் சீலத்திரு முத்துக் குமார சாமித் தம்பிரான் சுவாமிகளைக் காணக்கொண்டு செல்வதாகவே உணர்ந்தோம். திருமுறைகளும், திருக்குறளும் மற்றும் செந்தமிழ் நூல் பலவும் அழகுறப் பதிப்பித்தும் அடக்க விலையில் தமிழ் வழங்கு நிலமெல்லாம் தயவுடன் வழங்கி செந்தமிழ்க் கல்லூரியும் திருக்கோயிலும் சிவநெறி பாலிக்கும் அறக் கட்டளை பலவும் பரிபாலித்தருளும் திருமடம் இதுவல்லவா! என்றெண்ணும் போதே திருமடத்தின் தெய் வீகத்தொண்டு நிலை மனத்து ஓங்கியதால் இத்திரு மடத்து அதிபரைக் கண்டு மகிழும் பேறு வாய்த்ததே என்று பரவசவுணர்வுடன் பேசிய வண்ணமே திருமடத்துள் சென்றோம். திருமடத்து அன்பர்கள் சிலர்

முன் வந்து எம் தலைவர் மு. கிருஷ்ணன் அவர்களை முகமன்கூறி அகனமர்ந்த மகிழ்வுடன் அழைத்துச் சென்றனர். திருமடத்து அதிபர் சுவாமிகளைத் தற்போதே தரிசிக்கலாம் என்று உட்சென்று உத்திரவு பெற்றுவந்தோர் தெரிவித்தனர். அனைவரும் தலைவர் பின் தொடர்ந்தோம்.

## " கயிலைமாமுனிவர் திருக்காட்சி "

மழமைக்கல் பதித்த தரையில் நடந்து மாணெழிற் கோண முற்றத்தின் சுற்றிக் கொண்டு சென்று கயிலை மாமுனிவர் சீலத்திரு முத்துக் குமாரசாமித்தம்பிரான் சுவாமிகளைக் கண்டு திருவடியை வணங்கி எழுந்தோம்.

சுவாமிகள் தயவின் வடிவாய் செஞ்சடை சுற்றி நிமிர்முடியும் திருநீற்று நெற்றியுடன் திருமுறுவல் பூத்த மலர் முகமும் நோன்பின் உறுதவ மேனியும் காட்டி யருளி நாற்காலியில் அமர்ந்த வண்ணமாக இளநகை தவழ எல்லோருக்கும் விபூதி அளித்துக் கொண்டே எம் தலைவரிடம் தலப் பயணத்தைப் பற்றி வினவினார் கள். தலைவரும் இராமேச்சுரத்தில் பெற்ற உணவும் வசதியும் பற்றி தெரிவித்தும் ஒவ்வொருவரையும் உரிய முறையில் அறிமுகம் செய்தும் வைத்தார். மேலும், திரைலோக்கியில் கயிலாய நாதர் கோயில் வழிபாடு முதலாகப் பல திருத்தலங்களையும் குறிப்பிட்டு வினவி எங்கள் திருத்தல வழிபாட்டின் பேரருள் கூர முக மலர்ந்து நிறையருள் ஆசியுரை வழங்கினார். தமிழகத் துத்திரு மடங்களின் குருமகா சன்னிதானம் எல் லோரையும் ஒருங்கே கும்பிட்டாற்போல அவர் தம் திரு வடிவையும் அருளாசியையும் ஒருங்கே காணப் பெற்று பெருமகிழ்வெய்தினோம்.

காசிவிசுவநாதரை அனைத்து மக்களும் நீரும்மலரும் கொண்டு பூசனைபுரிவது போன்று தமிழ் நாட்டிலும்

மக்கள் சிவலிங்க பூசை புரிய அகவலத்தே அருள்மிகு மனத்துணை நாதர் திருக்கோயில் அமைய திருத்தொண் டர் திருநெறிய அறக்கட்டளை மேற்கொண்டுள்ள திருப் பணி செம்மையாய் நிறைவெய்தவும் வேண்டி வணங் கினோம். மகிழ்வுடன் வாழ்த்தி உணவுண்டு செல்லு மாறு பணித்து விடையளித்தார்கள்.

## "விடைபெற்று-வீடுசேர்தல்"

உணவுண்டு முடித்ததும் சிலர் திருமுறை நூல்கள் வாங்கிக் கொண்டனர். இரவு 9-30 மணிக்கு திருமடத்து அன்பர் சிலர் வாயில் வரையில் உடன் வந்து விடை கொடுத்தனர். வாழ்த்தி வணங்கிப் புறப்பட்டோம்.

அனைவரும் அமர்ந்ததும் அரகர முழக்கத்துடன் பேருந்து புறப்பட்டது. தலைவர் சேக்கிழார் அடிப்பொடி திரு. மு. கிருஷ்ணன் அவர்கள், ஓதுவாமூர்த்தி திரு. ஆட லரசு அவர்களின் திருமுறைத் திருத்தொண்டினைப் பாராட்டி யான் உரையாற்றப் பணித்து அன்பளிப்பு செய்து ஆசியருளினார். அடுத்து விளாப்பாக்கம் (சே. தி. ம.) தலைவர் அ. ரேணுகோபாலன் முதலாக அன்பர் பலர் மனமுவந்து ஓதுவாமூர்த்திக்கு அன்பளிப்பு செய்து மகிழ்ந்தனர்.

இவ்வழிபாட்டில் திருமுறையும், திருத்தலமும்-வழி பாடும் பற்றி பலரும் உரைவழங்கி மகிழ்ந்தனர். இவ் வழிபாட்டின் தேனிப்பை எல்லோரும் தெரிந்து கொண் டால் நலம் பெருகி உலகம் உய்யுமல்லவா? என்றும் பேசினர். ஏற்கெனவே தேவிகாபுரம் சே.ம. தலைவர் இரா. முருகன் இந்நிகழ்ச்சிகளை நன்கு எழுதி நூலாக வெளியிட தலைவர் திரு. மு. கிருஷ்ணன் அவர்கள் இசை வுடன் என்னை விரும்பி வேண்டிப் பணித்திருந்தார். ஆகவே இந்நூலை வேண்டி முன் கட்டணமாக ஒவ் வொருவரும் தமக்கு வேண்டிய நூல் எண்ணிக்கையில்

பணம் சேர்த்துத் தந்திருந்தனர். இது பற்றியும் நூல் எழுதுவதும் உடன் வெளிவருவதும் ஆக, ஆவன உடன் செய்க! என்றெல்லாம் விருப்பம் தெரிவித்து வந்தனர்.

பேருந்து ஓட்டுநர் திரு இராசு, நடத்துநர் திரு எல்லப்பன் ஆகியோர்க்கும் தலைவர் அன்பளிப்பு செய்து ஆசிவழங்க பேருந்து உரிமையாளர் திருமிகு ப. சொ. பஞ்சாட்சரம் அவர்கட்கு மனவுணர்வின் வாழ்த்தும் நன்றியும் தெரிவித்தோம். நடத்துநர் எல்லப்பன் தாம் எத்தனையோ சுற்றுலா சென்றுள்ளதைத் தெரிவித்தும், இத்திருத்தல வழிபாடே அன்பர் அனைவரும் திருக்கூட்டமாக, தேவாரப் பாடலுடன் வழிபாட்டில் தோய்ந் திருந்ததாகவும், பேரின்பந் தழைத்த, புதிய இன்ப அனு பவமாக இருந்ததாகவும் மெய்உணர்வு தோய்ந்த உரை வழங்கினர். தொலைக்காட்சியில் திரைப்படம் வழங்கினர். இங்ஙனமாகத் தொடர்ந்தது பயணம். இரவு 2 மணிப்போ தில் சேத்துப்பட்டில் தேவிகாபுரம் அன்பர்கட்கு விடை யளித்தும் 3-30 மணிப்போதில் ஆரணியில் களம்பூர், ஆரணி அன்பர்கட்கும் 4-30 மணிப்போதில் விளாப் பாக்கம் அன்பர்கட்கும் விடையளித்துச் சென்று அதி காலை 5-30 மணிப்போதில் ஆற்காடு சேர்ந்து பேருந்தி னுக்கு விடையளித்து வாழ்த்தி அவரவர் வீடு வந்து சேர்ந்தோம்.

## முடிவுரை.

*ஆக்கையாற் பயனென்? அரன்கோயில் வலம்வந்து*
*பூக்கையால் ஆட்டிப் போற்றியென்னாத இவ்*
*வாக்கையாற் பயனென் ?*

என்கின்றார் திருநாவுக்கரசர் எறும்பு (எறும்பியூர்) முதல் யானை(ஆனைக்கா)வரைஉயிரினங்களெல்லாம் சிவலிங்க பூசை புரிந்த சிறப்பினைத் தமிழகத் திருக்கோயில்களும்

தலபுராணங்களும் தெரிவிக்கின்றன. இவற்றால்-மக்கள் யாவரும் திருக்கோயில் வலம்வந்து கோயிலுள் சிவலிங்கமூர்த்தியைப் பூவும் நீருங்கொண்டு பூசித்தலைப் பெருந்தொண்டாகப் பண்டைநாளில் போற்றியொழுகினர் என்பது தெரிகின்றது. அப்பூசைத் திறத்தின் பொங்கிய பேரன்பால் இயற்கையழகின் எழுச்சியுறு திருத்தலங்கள் தோறும் சென்று திருக்கோயில்களுள் இறையருளின் பேரழகுத் தோற்றமெல்லாம் கண்டுணர்ந்து செழுந்தமிழ் அருச்சனைத் தேவாரப் பாடல்களைப்பாடிப் போற்றி பேரின்பம் உற்றனர். இதனைத் தேவாரம் - திருத்தொண்டர் புராணம் தெளிவுறவுணர்த்து கின்றன.

*திருக்கோயி லில்லாத திருவிலூரும்*
*திருவெண்ணீ றணியாத திருவிலூரும்*
*பருக்கோடிப் பத்திமையாற் பாடாவூரும்*
*பாங்கினொடு பலதளிகளில்லாவூரும்*
*விருப் போடு வெண்சங்கம் ஊதா ஊரும்*
*விதானமும் வெண்கொடியும் இல்லாவூரும்*
*அருப் போடு மலர் பறித்திட்டு உண்ணாவூரும்*
*அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே !*

என்கின்றார் திருநாவுக்கரசர். மலர் பறித்திட்டு உண்ணாவூர்-என்ற தொடரின்; <u>ஊர்</u> என்றது ஆகுபெயராய்-ஊர்வாழ் மக்களைக் குறித்தல்காண்க! ஆக, ஊர்தோறும் மக்கள்-பூநீர்கொண்டு பூசிக்க திருக்கோயில் தேவையென்பதும் அத்திருக்கோயிலுள் அவ்வூர் வாழ்மக்கள் மகிழ்வுடன் மலர் பறித்து அருச்சித்துப் பின்னரே உயிர்க்குறுதி பெற்றகுப் பின் உடலோம்புதலாக - உணவுண்ண வேண்டும் என்று அவர் வலியுறுத்தியுணர்த்தக் காண்கின்றோம்.

இதனை-தற்கால நிலைமையோடு எண்ணின் எண்ணமெலாம் வறுமையுற நீரற்றபாலையென நெஞ்ச வெம்மையே மிஞ்சுகின்றதும் தமிழகத்தின் விளங்கும் பண்டைத்திருக் கோயில்கள் பகட்டாகத் தெரிவனவும் பரந்திருப்பனவுமாக பல இருந்தும் மக்கள் அன்பின் வழிபாடு இன்றி வேடிக்கை விழாவும் ஆடம்பரமும் ஆகி வியாபாரக் கேந்திரமுமாய் மாறுகின்றனவோ என்னும் அச்சம் தோன்றுகின்றது. திருக்கோயில்களில்

*காவினையிட்டும் குளம்பல தொட்டும் கனிமனத்தால்*
*ஏவினையால் எயில்மூன் றெரித்தீர் என்று*
*இருபொழுதும்*
*பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் - நாமடியோம்*

என்ற-பிள்ளையார் வாய்மையின் நந்தவனங்கள் தீர்த்தக்கிணறு-கேணி-குளம்-பெருகாமல்-குறைந்துகொண்டே வந்து தற்போது இல்லாமலேயாகி-பூசைக்கும் நாள் மலரின்றி-நாள் பட்ட கடைப்பூவும் குளிர்புனல் இன்றி நேற்றே தேக்கிய நீருமாகக் கொண்டேயல்லவோ பெரும் பான்மை பூசை நடைபெறுகின்றன.

*பெருகலாந் தவம் பேதைமை தீரலாம்*
*திருகலாகிய சிந்தை திருந்தலாம்*
*பருகலாம் பரமாய தோர் ஆனந்தம்*
*மருகலானடி வாழ்த்தி வணங்கவே !*

என்கின்றார் திருநாவுக்கரசர். திருமருகற்பெருமானை பூநீரால் பூசித்து வாழ்த்தி வணங்கினால் மேற் சொன்னவைபெறலாம் என்பது கருத்து. ஆக தீவினைப்பயன் நீங்கி நலம்பெற திருக்கோயிலுள் சிவலிங்கமூர்த்தியை பூநீர்கொண்டு பூசிப்பதே வழியாகும். அதுவே பேரின்பப் பயனுமாகும் என்பதைத் தெரிகின்றோம். இனி எதிர்காலத்தும் - மக்கள் யாவரும் - ஈடுபாடு கொண்டு பூநீரினைப் போற்றி-பூசை புரிதலே உலகம் உய்யும் வழியாகும்,

## விண்ணப்பம் - வேண்டுகோள்

காசி (வாரணசி) திருப்பருப்பதம் (ஸ்ரீ சைலம்) கோகர்ணம் முதலிய பெருமை கூர் சிவத்தலங்களில் மக்கள்–தாமே பூ நீர் கொண்டு பூசிப்பது போன்று தமிழகத்திலும் மக்கள் யாவரும் பூ நீர் கொண்டு பூசைபுரியத் திருக்கோயில் ஒன்றாயினும் அவசியம் வேண்டும். அது உடனடித் தேவையென்னும் பேரார்வமும். ஆற்காடு வரசித்தி விநாயகர் பழநியாண்டவர் திருக்கோயில் வாரவழிபாட்டுச் சபையின் திருஞானசம்பந்தர் திருமுறை முற்றோதலைத் தொடர்ந்தபோது தலைவர் மு. கிருஷ்ணன் I.A S (ஓய்வு) அவர்கள் உள்ளிட்ட அன்பர்கள் அனைவர் உள்ளத்தும் ஒருங்கே எழுச்சியுற்று வாய்மையாய் வெளிப்பட்டது. (திருஞானசம்பந்தர் திருவாடனைப் பதிகத்துப் பத்துப்பாடலிலும் மக்கள் தாமே பூநீரால் பூசிக்கும் அடியார் திறத்தைதயே யுணர்த்தக் காணலாம்.)

அடுத்தடுத்துத் தோன்றிய திருவருள் வாய்ப்பினால் திருத்தொண்டர் திருநெறிய அறக்கட்டளை அமைந்து பதிவு செய்யப் பெற்று அரக்கோணம் – பனப்பாக்கம் சாலையின் அகவலம் மேற்பால் மோட்டூர் தெற்கில் குசத்தலையாற்றின் வடகரையின் நிலம் வாங்கப்பெற்று மேடானபகுதி வெண்குன்றின் ஏற்கெனவே இருந்த மன்னார்சாமி சிவன் கோயில் தரைமட்டமாக சிவலிங்கமும் போகி–பலிபீடம் மட்டும் உள்ள இனிய திருநிலத்தே – அருள்மிகு மனத்துணை நாதர் திருக்கோயில் தலைவர் அவர்களால் கால்கோள் செய்யப்பெற்று திருப்பணி நடைபெற்றுக் கொண்டுள்ளது. தமிழகமும் உலகும் ஒரு நெறிய மனம் வைத்து ஒருமை மகளிர் போல ஒருமை பெறவேண்டின் அகவலம் அடைந்து மனத்துணை நாதர் மலரடி போற்றல் வேண்டும் என்னும் திருக்குறிப்பே இங்ஙனம் நடாத்துகின்றதோ?! என்றும் நம்புகின்றோம். உலகியலின் அலைவின்றி ஒரு நெறியில் உலகம் உயய இத்திருக்கோயில் சிறப்புற வேண்டும் என்றே திருவருள் புரிய இறைஞ்சுகின்றோம். மக்கள் யாவரும் பங்குகொண்டு திருத்தொண்டின் சிறப்புற மனத்துணை நாதரை வேண்டுகின்றோம்.

*ஒல்லையாறி உள்ளம் ஒன்றி கள்ளம் ஒழித்து வெய்ய*
*செல்லையாறி தூய்மை செய்து காமவினையகற்றி*
*நல்லவாறே யுன்றன் நாமம் நாவில் நவின்றேத்த*
*வல்லவாறே வந்து நல்காய் வலிவலம் மேயவனே !*

என்று வேண்டுகின்றார் – திருஞானசம்பந்தர். இத்திருப்பாடலின் வலிவலம் மேயவனே! என்பதனை அகவலம் மேயவனே! என்றும் திருத்தியுறக் காண்கின்றோம்.

வணக்கம்.

## அன்பிலாலந்துறை

1 வானஞ் சேர்மதி சூடிய மைந்தனை
நீநெஞ் சேகெடு வாய்நினை கிற்கிலை
ஆனஞ் சாடியை அன்பிலா லந்துறைக்
கோன்எஞ் செல்வனைக் கூறிட கிற்றியே. (திருநாவுக்கரசர்)

## திருவானைக்கா

2 ஒழுகு மாடத்துள் ஒன்பது வாய்தலுங்
கழுக ரிப்பதன் முன்னங் கழலடி
தொழுது கைகளால் தூமலர் தூவிநின்று
அழும வர்க்கன்பன் ஆனைக்கா அண்ணலே
(திருநாவுக்கரசர்)

## எறும்பியூர்

3 வானைக்காவில் வெண்மதி மல்குபுல்கு வார்சடைத்
தேனைக்காவில் இன்மொழித் தேவிபாக மாயினான்
ஆனைக்காவில் அண்ணலை அபயமாக வாழ்பவர்
ஏனைக்காவல் வேண்டுவார்க் கேதும்ஏதம் இல்லையே
திருஞானசம்பந்தர்

4 விரும்பி யூறு விடேல் மடநெஞ்சமே
கரும்பி னூறல்கண் டாய்கலந் தார்க்கவன்
இரும்பி னூறல றாததோர் வெண்டலை
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே (திருநாவுக்கரசர்)

## கற்குடி

5 வடந்திகழ் மென்முலை யாளைப் பாகம தாக மதித்துத்
தடந்திரை சேர்புனல் மாதைத் தாழ்சடைவைத்த சதுரர்
இடந்திகழ் முப்புரி நூலர் துன்பமோ டின்பம தெல்லாம்
கடந்தவர் காதலில் வாழுங் கற்குடி மாமலை யாரே
திருஞான சம்பந்தர்

## திருஆலவாய் (மதுரை)

6 நறுமலர் நீருங் கொண்டு நாடொறு மேத்தி வாழ்த்திச்
செறிவன சித்தம் வைத்துத் திருவடி சேரும் வண்ணம்
மறிகடல் வண்ணன்பாகா மாமறை யங்க மாறும்
அறிவனே ஆலவாயில் அப்பனே அருள்செய்யாயே
(திருநாவுக்கரசர்)

## திருக்குற்றாலம்

7 வம்பார்குன்றம் நீடுயர் சாரல் வளர் வேங்கைக்
கொம்பார் சோலைக் கோலவண்டி யாழ்செய் குற்றாலம்
அம்பால் நெய்யோடு ஆடல் அமர்ந்தான் அலர்கொன்றை
நம்பான் மேய நன்னகர் போலும் நமரங்காள் (சம்பந்தர்)

## திருஇராமேச்சுரம்

8 குன்றுபோல் தோளுடைய குணமிலா அக்கர் தம்மைக்
கொன்றுபோராழி யம்மால் வேட்கையாற் செய்த கோயில்
நன்றுபோல் நெஞ்சமேநீ நன்மையை அறிதியாயில்,
சென்று நீதொழுதுய் கண்டாய் திருஇரா மேச்சுரமே.
(திருநாவுக்கரசர்)

## திருப்புனவாயில்

9 எற்றே நினை என்னோடு சூளறு வைகலும்
மற்றேதும் வேண்டா வல்வினை ஆயின மாய்ந்தறக்
கற்றூறு கார்க் காட்டிடை மேய்ந்த கார்க் கோழிபோய்ப்
புற்றேறி கூ கூ என அழைக்கும் புன வாயிலே
(நம்பியாரூரர்)

## "திருவுத்தரகோச மங்கை - திருப்பெருந்துறை"

10 அதுபழச்சுவையென அமுதென அறிதற்கு
அரிதென எளிதென அமரரும் அறியார்
இது அவன் திருவுரு இவன் அவனெனவே !
எங்களை யாண்டு கொண்டு இங்கெழுந்தருளும்
மது வளர் பொழில் திருவுத்தரகோச
மங்கையுள்ளாய திருப்பெருந் துறை மன்னா
எது எமைப் பணி கொளும் ஆறது கேட்போம்
எம்பெருமான் பள்ளியெழுந்தருளாயே
(மாணிக்கவாசகர்)

## திருவெண்ணியூர்

11 சோதியைச் சுண்ணவெண் ணீறணிந் திட்டஎம்
ஆதியை ஆதியும் அந்தமுமிலாத
வேதியை வேதியர் தாந்தொழும் வெண்ணியில்
நீதியை நினையவல் லார்வினை நில்லாவே
(திருஞானசம்பந்தர்)

12 சூல வஞ்சனை வெல்லவெஞ் சுந்தரன்
கோல மாவருள் செய்ததோர் கொள்கையான்
காலன் அஞ்சவு தைத்திருள் கண்டமாம்
வேலை நஞ்சனைக் கண்டது வெண்ணியே
(திருநாவுக்கரசர்)

## திருமங்கலக்குடி

13 தங்கலப்பிய தக்கன் பெருவேள்வி
அங்கலக் கழித் தாரருள் செயதவன்
கொங்கலர்க் குழல் கொம்பனை யாளொடு
மங்கலக்குடி மேய மணாளனே (திருநாவுக்கரசர்)

## திரைலோக்கியசுந்தரம்

14 அம்பளிங்கு பகலோன்பால் அடைபற்றாய் இவள் மனத்தின்
முன்பளிந்த காதலும் நின்முகந்தோன்ற விளங்கிற்றால்
வம்பளிந்த கனியே யென்மருந்தே நல் வளர்முக்கண்
செம்பளிங்கே பொழிற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே!
(கருவூர்த்தேவர்)

## திருத்தொண்டர் திருநெறிய அறக்கட்டளை

1/57, புதுப்பேட்டை, பனப்பாக்கம் அஞ் 631 052 வ.ஆ.அ.மா.
பதிவெண், 47/94.

தலைவர் : **திரு. மு. கிருஷ்ணன்,** I.A.S. (ஓய்வு)
செயலாளர் : **திரு. ப. சொ. பஞ்சாட்சரம்,** B.A.
ஸ்ரீ கிருஷ்ணா பஸ் காஞ்சிபுரம்.
பொருளாளர்: **திரு. இரா. ஈசுவரப்பன்,**
இலட்சுமி சரசுவதி நகை மாளிகை, ஆற்காடு.
செயற்குழு உறுப்பினர் :
**திரு. ஆ. திருவாசகனார்,** M.A. சென்னை.
**திரு. புலவர் எ. வேலாயுதன்,** புதுப்பேட்டை நெடும்புலி
**திரு. பா. நடராச பிள்ளை,** அகவலம்.
**திரு. அ. கோ. சண்முகம்,** மேலபுலம்.

---

இந்நூல் கிடைக்குமிடம் :-
**இலட்சுமி சரசுவதி நகை மாளிகை**
126 - கடைவீதி ஆற்காடு (அஞ்) 632503.



முன் அட்டை முகப்பு :- அகவலம் மோட்டூரில்

அமைகின்ற-அருள்மிகு

**மனத்துணை நாதர் திருக்கோயில்**



திருமுறைப் பொருளாரும் தேவாதி தேவநின்

சேர்ந்துணர தேனாயருள்

செந்தமிழ் வடிவாகி சிந்தனைச் சுவையாகி

செந்தண்மை வளர் சோதியே

கருமுறை யுருவாகி காலமெல்லாம் வெம்மை

காய்க்கின்ற ஊனுடம்பே

கட்டனேன் கொண்டாடி கானலின் நீர்தேடி

கதியற்றுப் போகாமலே

திருவடி மலர்பூசை சீர்தொண்டர் கூட்டமுடன்

செய்மகிழ்வின் வாழ்வையருள்வாய்

செஞ்சடையின் கங்கைமதி பொன்னிதழி தாரழகின்

தேசருளும் நீலகண்டா !

பொருவறு அண்டமுதல் பிண்டமணு யாவுளும்

புக்கொளிரும் வாழ்வின் முதலே

போற்றியெண் கோணமிசை பொன்னகவலத்திலெழு

பூ மனத்துணை நாதனே !

(திருமுறைமணி)



முன் அட்டை முகப்பு :- அகவலம் மோட்டூரில்
அமைகின்ற-அருள்மிகு

**மனத்துணை நாதர் திருக்கோயில்**



திருமுறைப் பொருளாரும் தேவாதி தேவநின்
சேர்ந்துணர தேனாயருள்
செந்தமிழ் வடிவாகி சிந்தனைச் சுவையாகி
செந்தண்மை வளர் சோதியே

கருமுறை யுருவாகி காலமெல்லாம் வெம்மை
காய்க்கின்ற ஊனுடம்பே
கட்டனேன் கொண்டாடி கானலின் நீர்தேடி
கதியற்றுப் போகாமலே

திருவடி மலர்பூசை சீர்தொண்டர் கூட்டமுடன்
செய்மகிழ்வின் வாழ்வையருள்வாய்
செஞ்சடையின் கங்கைமதி பொன்னிதழி தாரழகின்
தேசருளும் நீலகண்டா !

பொருவறு அண்டமுதல் பிண்டமணு யாவுளும்
புக்கொளிரும் வாழ்வின் முதலே
போற்றியெண் கோணமிசை பொன்னகவலத்தினெழு
பூ மனத்துணை நாதனே !

(திருமுறைமணி)